உ

சிவமயம்.

பேரையூர்,

ஸ்ரீ சாந்த லிங்க சுவாமிகள் செய்த,

# வைராக்கிய (பக்தி) சதகத்துக்கு,

திருப் போரூர்,

## ஸ்ரீ சிதம்பர சுவாமிகள்,

இயற்றிய பொழிப் புரையின்,

உதாரணக் கவி 103-க்கு,






திருப் பூ வணம், வேதாந்த மடம்,

சத சாஸ்திர கர்த்தா,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள்

இயற்றிய,

பக்தி ரச உரை.

விலை] 1963. [ரூபாய் ஒன்று.

உ

## பக்தி ரச உரைப் பாயிரம்.

---

கருககெடுக் கின்ற இபமுக இறையைக்
காநவள் கணவன்சண் முகனை,
எருக்கணி பாரி ஜாதவீச் சுரனை
இளமுலை அமிர்தவல் லியினை,
மருக்கமழ் அடியார் பந்தத்தை அறுத்து
மாண்புறு சொரூபம தளித்த,
திருக்களர் வீர சேகர னடியைத்
திரும்பணிந் தியற்றுவாம் உரையை. 1

பேரையூர்ச் சாந்த லிங்கதே சிகனார்
பெய்தவை ராக்ய சதகத்,
தோரையாம் நூற்குச் சிதம்பர ஆசான்
உரைசெய்து உதாரணம் கொடுத்த,
சீரையாம் கவிதூ றுடன்மூன் றதற்கும்
சிறப்பதாய்ப் பத்திர சம்மெனப்,
பேரையாம் காசி காநந்தப் பெயரோன்
பெய்தனன் உரையினை மகிழ. 2



பேரை யூர்

ஸ்ரீ சாந்த லிங்க சுவாமிகள் இயற்றிய

பக்தி (வைராக்கிய) சதகத்துக்கு

திருப் போரூர்

ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் இயற்றிய

பொழிப் புரையின் உதாரணக் கவி 102க்கு

திருப் பூ வணம், வேதாந்த மடம்,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

இயற்றிய

# பக்தி ரசம் என்னும் உரை

இது

திருப் பூ வணம், வேதாந்த மடாதிபதி

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய

ஸ்வாமிகளால்

மதுரை அஜந்தா பிரசில் பதிப்பிக்கப்பட்டது.

விலை] 1963. [ரூபா. 1-00

## வைராக்கிய சதக உதாரண சாத்திர அகராதி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | அருணகிரி யந்தாதி | 1 | 21 | திருக் குறள் | 15 |
| 2 | அறி வாநந்த சித்தியார் | 6 | 22 | திரு நாவுக் கரசர் தேவாரம் | 4 |
| 3 | ஆநந்தத் திரட்டு | 3 | 23 | திரு வாசகம் | 10 |
| 4 | ஒழிவி லொடுக்கம் | 2 | 24 | தேவிகாலோத்தரம் | 2 |
| 5 | கந்தர் அநுபூதி | 3 | 25 | நல் வழி | 1 |
| 6 | கந்தர் அலங்காரம் | 1 | 26 | நா லடியார் | 2 |
| 7 | காசி காண்டம் | 1 | 27 | நீதி வெண்பா | 1 |
| 8 | சம்பந்தர் தேவாரம் | 1 | 28 | பகவற் கீதை | 1 |
| 9 | சிவ ஞாந தீபம் | 1 | 29 | பட்டி நத்தார் பாடல் | 2 |
| 10 | சிவ ஞாந வள்ளலார் | 2 | 30 | பிரபு லிங்க லீலே | 1 |
| 11 | சிவ தருமோத்தரம் | 4 | 31 | பெருந் திரட்டு | 6 |
| 12 | சிவ போக சாரம் | 3 | 32 | பொன் வண்ணத் தந்தாதி | 1 |
| 13 | சிவாநந்த மாலே | 4 | 33 | மெய்ஞ் ஞாந விளக்கம் | 2 |
| 14 | சிவாநுபூதி விளக்கம் | 1 | 34 | மெய்ம் மொழி | 2 |
| 15 | சுந்தர மூர்த்தி தோவாரம் | 1 | 35 | வாசிட்டம் | 8 |
| 16 | ஞாந சூரியன் | 1 | 36 | வீர ஆகமம் | 1 |
| 17 | தத்துவ ராயர் அடங்கன் முறை | 3 | 37 | தால் காப்பியம் | 1 |
| 18 | ஷ பாடு துறை | 1 | | | |
| 19 | திரு அம்மாணே | 2 | | | |
| 20 | திரு அருட் பயன் | 2 | | ஆகச் செய்யுள் | 102 |



## வைராக்ய சதக உரை உதாரண சாத்திரம் 37க்கு கவி 102.

### 1. வாசிட்டம் 8.

1 மிக முயன்று 2–0–4
2 இயற்கை குணஞ் 4-4-12
3 கையினு லறையுண் 4-4-30
4 தாரதந மிகுமென் 4-4-44
5 அறிவெ னும்விதை 4-4-104
6 மெத்தென்ற 5-1-6
7 இச்சையாம் விறகு 5-3-4
8 எறியுங் கடலி 6 இதோ. 9.

### 2. பகவற் கீதை 1.

9 வாங்கி யைம்பொறி 6-19

### 3. தத்துவ ராயர் அடங்கன் முறை. 3.

அமிர்த சாரம்.

10 செவ்வே யுடலுஞ் 111
11 உள்ளத்தி ருந்தும் 183

மோக வதைப் பரணி சசி வந்ந போதம்

12 வினவிற்ப ரத்தையறி 81

### 4. பாடு துறை 1.

13 தந்தைதா யாவானுஞ்

### 5. பட்டிநத்தார் பாடல் 2.

14 சினந்தனே யற்று (கைலாயம்) 1 3
15 அண்ணறன் வீதி (பொது) 1 27

### 6. ஒழிவி லொடுக்கம் 2.

16 உடற்குயிர் போற் 1-15
17 நாயேறி 1-56

### 7. திரு வாசகம் 10.

18 ஆடு கின்றிலே-(ஆத்ம சுத்தி) 1
19 ஷ ஷ ஷ
20 முத்தனே முதல்வா-(அருட் பத்து) 8
21 பூத்தாரும் பொய்கை-
(தோ ணேக்கம்) 1
22 நிலநீர் நெருப்புயிர்- (ஷ 5
23 நாயிற் கடையாம்-(குழைத்த பத்து) 8
24 பொத்தையூன்-(அதிசயப் பத்து) 7
25 மெய்தா னரும்பி-(திருச் சதகம்) 1
26 வாழ்கின்ருய் (ஷ) 20
27 பக்திவலேயிற் படு-(அண்டப் பகுதி) 42

8. சுந்தர மூர்த்தி சுவாமிகள் தேவாரம் 1.

28 தேனைக் காவல் (ஊர்த் தொகை) 7

9. திரு நாவுக் கரசர் தேவாரம் 4.

29 இறுமாந்தி ருப்பன்-(அங்க மாலை) 11
30 நங்க டம்பனை-(கடம் பூர்) 9
31 அருப்புப் போல்-(அரசில் கரை புத்தூர்) 5
32 சங்கநிதிபதுமதி(தாண்டகம்) 10

10. சம்பந்தர் தேவாரம் 1.

33 செல்வ நெடுமாடம்-(கோயில்) 5

11. கந்தர் அநுபூதி 3.

34 செம்மான் மகளை 12
35 ஆதா ரமிலேன் 26
36 இல்லே யெனு 29

12. கந்தர் அலங்காரம் 1.

37 அராப்புனை வேணியன் 74

13. அருண கிரி அந்தாதி 1.

38 பரகதிக்கு வித்தா 58

14. பிரபு லிங்க லீலை 1.

39 ஓடும் பொன்னும் 18.19

15. திருக் குறள் 15.

40 வேண்டுதல் வேண்டாமை 1-4
41 இருள்சே ரிருவினையுஞ் 1-5
42 பிறவிப் பெருங்கடல் 1-10
43 யாகாவா ராயினு 13-7
44 வலியி னிலைமையான் 28-3
45 பொய்ம்மையும் 30-2
46 புறந்தூய்மை 30-8
47 அறிவினு ளுருவ துண்டோ 32-5
48 ஒருபொழுதும் வாழ்வ 34.7
49 உறங்குவது போலுஞ் 34-9
50 புக்கிலமைந் தின்று 34-10
51 யாதனின் யாதனி 35-1
52 மற்றுந் தொடர்பாடெ 35-5
53 அவா வென்ப 37.1
54 ஓதி யுணர்ந்தும் 84-4

16. பெருந் திரட்டு 6.

55 காயநீர்க் குமிழி
56 இல்லின்ப மிகழ்ந்து
57 அண்டமெண்டி (குருந் திரட்டு)
58 தீய வசுரர்



59 பரண மாகிய
60 வில்வி ளங்கிய

17. தேவிகாலோத்தரம்-2.

61 மந்திரஞ் செபந்
62 சமயா சார சங்கற்ப

18. நா லடியார்-2.

63 யானையெ ருத்தம் 1-3
64 குடருங் கொழுவும் 5-5

19. நீதி வெண்பா 1.

65 இன்னற ரும் 46

20. சிவ தருமோத்தரம் 4.

66 என்றென் றெண்ணி 8-21
67 அங்கி யதனிற் 8-22
68 கருப்பா சயமே 8-23
69 மண்ணினுந் 8-90

21. சிவாநந்த மாலை 4.

70 எங்குஞ் சிவமொ
71 விடொழியப்
72 நல்ல வனுசுவை
73 ஊனு முரையு

22 சிவ போக சாரம் 3.

74 ஆர்பெரிய ரார் 96
75 நாம் பெரிய ரெ 84
76 அமைத்த வினைக் 98

23. சிவாநுபூதி விளக்கம் 1.

77 விருப்பு வெறுப்

24. சிவ ஞான தீபம் 1.

78 விரும்புற்ற

25. ஞான சூரியன் 1.

79 உடலை யொண்

26 மெய்ஞ் ஞான விளக்கம் 2.

80 தேவின்மா நுட
81 வந்திடு மாணத்

27. ஆநந்தத் திரட்டு 3

82 பெறுதற் கரிய
83 மந்திர வாட்
84 எப்பொருள் களுந்

28. காசி காண்டம் 1.

85 கருவிடை

29. மெய்ம் மொழி 1.

86 தானலா தொன்று

30. அறி வாநந்த சித்தியார் 6.

87 விரிந்தநல் வேத 24
88 அந்தம யங்கொண் 73
89 ஊசுமு டலி 75
90 தனக்கு ம நது 77









# வைராக்கிய சதக உரை உதாரணக் கவி.

பக்தி ரச உரை.

## மூலம் பாட்டு 1. வாழி நெஞ்சமே.

### வாசிட்டம் 6. நிர்வாணப் பிரகரணம் பாட்டு 9.

எறியுங் கடலி னுகத்துளையி
லாமைக் கழுத்துப் புகுவதுபோற்,
பொறிவெம் பிறவி யநேகத்தாற்
புருடன் விவேகி யெனப்பிறந்து,
முறியும் பிறவிப் பயனிலதிம்
மோக மமையுஞ் செய்தொழிலாற்,
செறிவ தென்னே யிவற்றாலே
திநங்க ளெல்லாஞ் சென்றிடுமால். 1

(இ-ள்) எறியும் கடலின்-(அலைகள் மிகுந்து) அலையும் சமுத்திரத்தில் உள்ள, நுகத் துளையில்-நுகத்தடித் துவாரத்தில், ஆமைக் கழுத்து-ஆமையின் கழுத்து, புகுவது போல்-பிரவேசிப்பதே போல், பொறி வெம் பிறவி-துயரந் தரும் கொடூர சந்மங்கள், அநேகத்தால்-அநேகஞ் சென்ற பின்னர், புருடன்-அதிகாரியானவன், விவேகி என-விவேகி என் று (சொல்லும்படியாக), பிறந்து-ஜநித்து, பிறவி முறியும்-ஜந நமரண சம்சாரம் கெடும், பயன் இலது-பிரயோஜந மில்லாமல், இம் மோகம்-இந்த மயக்கம், அமையும்-பொருந்தும், செய் தொழிலால்-செய் வினைகளால், செறிவது-பொருந்துவது, என்னே-யாது கொல்? இவற்றாலே-இவ் வினைகளாலே, திநங்கள் எல்லாம்-நாட்கள் யாவும், சென்றிடும்-(வீணாகவே) போகும். எ-று. ஆல்-அசை. 1

திருக் குறள்-34 யாக்கை நிலையாமை-9.

மூலம் 1. வாழி நெஞ்சமே.

உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி,
விழிப்பது போலும் பிறப்பு. 2

(இ-ள்) சாக்காடு-(ஒருவனுக்கு) மரணம் (வருதல்), உறங்குவது போலும்-தூக்கம் (வருதல்) போலும், பிறப்பு-(அம் மரணத்தின் பின்னே) பிறப்பு (வருதல்), உறங்கி-தூங்கி, விழிப்பது-விழித்தல் (வருதல்), போலும்-போலு மாம், எ-று.
"போலும் போலும் என்ற உம்மைகள். முற்றும்மை 2

ஆநந்தத் திரட்டு.

மூலம் 1. வாழி நெஞ்சமே.

பெறுதற் கரிய பிறப்பீ திதன்போக்.
கறிதற் கரிய வவதி-பிறிதொன்றை,
நாடுதற்கு நேரமுண்டோ நன்னெஞ்சே முத்திநெறி,
கூடுதற் கல்லாதுகு றித்து. 3

(இ-ள்) ஈது-இந்த மநுஷ ஜந்ம மானது, பெறுதற்கு-அடைதற்கு. அரிய-அருமையான, பிறப்பு-பிறவியாகும். இதன் போக்கு-இதன் மரணமோ, அறிதற்கு-உணரமுடியாத. அரிய-கஷ்டமான. அவதி-துக்க மாம். நல் நெஞ்சே-நல்ல மநமே, குறித்து-(இந்த மநித (ஜந்மத்தில்) விசாரித்து. முத்தி நெறி-



மோக்ஷ மார்க்கத்தை, கூடுதற்கு அல்லாது-அடைவதை விட்டு. பிறிது ஒன்றை-மற்றவைகளை, நாடுதற்கு-கருதுவதற்கு, நேரம் உண்டோ-காலம் உளதோ. எ-று. 3

மூலம் 2. தானேயே தர.

வாசிட்டம்-3 திதிப் பிரகரணம்-தாசூரன் கதை-பாட்டு 12.

இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னே
யாவையுமாம் பிரமநீ யென்னல் வேண்டும்,
வியப்புறவா சையிலுழல்வார்க் கிவ்வா றேதின்
மீளாத தீநரகில் விழ்த்த தாகுந்,
தியக்குறுபோ கத்தாசை தீர்ந்து புந்தி
தெளிந்தமகத் தாவார்க்கே திகழத் தோன்றும்,
மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக் கிட்டா
வருந்தியுந்தன் பிறப்பறுக்கு மகனு மாங்கே. 4

(இ-ள்) முன்னே-ஆதியில், இயற்கை-சம தம. குணம் சோதித்து-குணங்களாற் (சிடனைப்) பரீக்ஷித்து, பின்னே-(அதன்) பின், யாவையும் ஆம்-சர்வமாயிருக்கும், பிரமம்-(இந்தச் சுத்தப்) பிரமமே. நீ என்னல்-நீ என்று, வேண்டும்-(உபதேசிக்க) வேண்டும், வியப்புற-(விடய) சத்திய புத்தியால், ஆசையில்-(விஷய) அவாக்களில், உழல்வார்க்கு-(மோக முற்று) அலைபவர்க்கு, இவ் வாறு ஒதின்-எல்லாமாய சிவமே நீ என உபதேசிக்கின், மீளாத-மீட்சி யில்லாத, தீ நரகில்-மகா நரக (ஜால) ங்களில், வீழ்த்தது ஆகும்-தள்ளிய தாகும், தியக்குறு-மயக்கத்தைச் செய்யும்,

போகத்து-போகங்களில். ஆசை தீர்ந்து-அவா வொழிந்து, தெளிந்த புந்தி-உயர்ந்த புத்தியினை யுடைய. மகத் தாவார்க்கே-மகாத்மாக்கட்கே, திகழத் தோன் றும்-உபதேசித்தல் உசிதமாம். மயக்கம் அற-மோகம் அறும்படி, உணர்த்த வல்ல-தெரிவிக்கும் ஆற்ற லுற்ற, குருவை-தேசிகரை, கிட்டா-அடைதலும் (துர்லபம்). வருந்தியும்-(அது போலவே சிசுருஷையாலும் சிரவணு தியாலும்) சிரம மெடுத்து. தன் பிறப்பு-தன் ஜன்மத் தை. அறுக்கும்-நிவிர்த்தித்துக் கொள்ளும். மகனும் ஆங்கே-சீடனும் துர்லப மாம். எ-று. 4

மூலம் 2. தாளே யேதர

விராகமம்

அடுத்ததின் றன்மை யாந்மா வாகுமென் றறிந்து நல்லோர்,
நடித்திடுஞ் சமய வாத நற்றவஞ் செபந்தி யாநம்,
படிற்றுல கியற்கை யாவும் பரகதி விலக்கா மென்றே,
விடுத்தருட் குரவன் பாத மேவிமெய்ப் பணிசெய் வாரே. 5

(இ-ள்) ஆந்மா-(இந்த ஜீவ) ஆத்மா வானது. அடுத்ததின்-(தான்) நெருக்கியதன். தன்மை-சொருபம், ஆகும் என்று-ஆகும் என, அறிந்து-உணர்ந்து, நல் லோர்-உயர்ந்தோர், நடித்திடும்-அநுட்டிக்கப்பட்ட, சமய வாதம்-(அறு) சமய வாதங்களும், நல் தவம்-உயர்ந்த (கிருச்சிர சாந்திராயணுதி) தவமும். செபம்-(பஞ்சாக்ஷர, அஷ்டாக்ஷர) ஜெபமும், தியாநம்-(சகுண நிர்குணத்) தியாநமும், படிற்று-குற்றம் பொருந்திய, உலக இயற்கை-உலக நடை, யாவும்-அனைத்தும். பர கதி-மே லான மோக்ஷத்திற்கு, விலக்கு ஆம்-பிரதி பந்தக மாம், என்று-எனக் கருதி. விடுத்து-(மேற் கூறிய யாவற்றையும்) விட்டு, அருள்-கிருபையினை யுடைய, குரவன்-ஆசிரியரது, பாதம்-திரு வடிகளை, மேவி-அடைந்து, மெய் பணி-உண்மை யாக (சதுர் வித) பணிவிடைகளையும், செய்வார்-செய்து கொண் டிருப்பார்கள். எ-று.

"படிறு" படிற்று எனப் பகுதி யிரட்டித்தது.
ஏ ஏ அசை. 5



மூலம் 2 தாளே யேதர.

வாசிட்டம்-3 திதிப் பிரகரணம்-தாசூரன் கதை-பாட்டு. 44.

தாரதந மிகுமென்னிற் றளையாகு மப்பாசந் தளைத்துக் கொண்டா,
லாரதனை யறுத்தகலும் விரகுடையா ரறிவில்லா ராசை விஞ்சிக்,
கூரிதையா மப்போகத் துழன்றுழக்குங் கொடுந்துயரைக் குறித்த போதே,
தீரதையா மறிஞர்க்கு விரத்தியுள தாய்ச்சித்தந் தெளியு மன்றே. 6

(இ-ள்) தார தநம்-தாரமும் தநங்களும், மிகும் என்னில்-விருத்தியாகு மாயின், தளை ஆகும்-(நடை) விலங்காகும், அப் பாசம்-அந்த ஆசையாகிய விலங்கை, தளைத்துக் கொண்டால்-அடைந்து விட்டால், அதனை-

அந்த ஆசையாகிய விலங்கை, அறுத்து—சேதித்துக் கொண்டு, அகலும்—(தவப் பொருட்டுச்) செல்லும், விரகு உடையார்—வைராக்கிய முடையவர், ஆர்—யாவர் உளர், அறிவில்லார்—மூர்க்கர், ஆசை விஞ்சி—ஆசை மிகுத்து, சூரிதையாம்—(ஜந்ம ஏதுவாதலிற்) கொடூர மான, அப் போகத்து—அந்த போகங்களில், உழன்று—(அலைவுற்று) மூழ்கி, உழக்கும்—அடிபட்டநுபவிக்கும், கொடும் துயரை—பெருந் துக்கத்தை, குறித்த போதே—நாடிய கணத்திலேயே, திரதையாம்—தைரியம் வாய்ந்த, அறிஞர்க்கு—விவேகிகட்கு, விரத்தி உளதாய்—வைராக்கிய முண்டாகி, சித்தம் தெளியும்—மநமானது பரிசுத்த மடையும். எ—று. அன்று ஏ அசை நிலை. 6

மூலம் 3 நவிலி னிம்மனே

தொல்காப்பியம்—சொல்—அதிகாரம், இடையியல் (22 754) இயற்பெயர் முன்ன ராரைக் கிழவி,
பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே.

(இ—ள்) இயல்—இயல்பாய் உள்ள, பெயர்—பெயருக்கு, முன்னர்—ஈற்றில், ஆர். ஐ. கிளவி—ஆர். ஐ என்னும் சொற்கள், பலர்க்கு உரிய—பலர்பாலுக்கு உரிய, எழுத்தின்—எழுத்தினை உடைய, வினையொடு—வினையைக் கொண்டு, முடிம்—முடியும். எ—று. ஏ அசை, உகரம் குறுகிற்று. 7

**ஆநந்தத் திரட்டு-ஞாந சூரியன்.**

உடலை யொண்பொரு ளினையுல கியல்பினை
யுயர்குல நெறிதன்னை,
யடையு மைந்தர்தாய் தந்தைநன் மனையென
வறைதரு மவர்தம்மை,
விடவி கந்திறை கழலிணை மேவிய
விமலர்தங் களையெல்லா,
முடைய நன்குறு மொழிமறை முநிவர்க
ளுரைப்பராத் தர்களென்றே. 8



(இ—ள்) உடலை—சரீரத்தை, ஒண் பொருளினை—ஒள்ளிய திரவியத்தை, உலகு இயல்பினை—உலக நடையை, உயர்—உயர்ந்த, குல நெறி தன்னை—குலாசார மார்க்கங்களை, அடையும்—(கருமாதீநமாகப்) பொருந்திய, மைந்தர்—பிள்ளைகள், தாய் தந்தை—மாதா பிதா, நன் மனை—கற்புடைய பெண்சாதி, என அறைதரும்—என்று சொல்லப்பட்ட, அவர் தம்மை—மேற் கூறியவர்களை, இகந்து—வெறுத்து, விட—விட்டு, இறை கழலிணை—பரமேசுரனது (உயர்ந்த) திருவடிகளை, மேவிய—அடைந்த, விமலர் தங்களை—நிர்மல சித்த முடைய சாதுக்களை, எல்லாம் உடைய—சர்வமும் (தன்னிட) முள்ள, நன்கு உறும்—நன்ருகப் பொருந்திய, மறை மொழி—வேத வாக்கியங்களை யுடைய, முநிவர்கள்—(மநந சீலர்களாகிய) முநிகள், ஆத்தர்கள் என்று—உண்மை கூறுபவர்கள் என, உரைப்பர்—சொல்லுவார்கள். எ—று. 'தன்னை' தம்மை, தங்களை' என்பதில், தன்—தம்—தம்—ஏ—அசை. 8

மூலம் 3 நவிலி னிம்மனே.

**திருவருட் பயன்-1. உமாபதி சிவாச்சாரியார்.**

அகர வுயிர்போ லறிவாகி யெங்கு,
நிகரி லிறைநிற்கு நிறைந்து. 9

(இ-ள்) உயிர் அகரம் போல்-உயி ரெழுத்தில் அகர அக்ஷர மானது (எல்லா மெய்யெழுத்துகளிலும் இருப்பது) போல, நிகர் இல்-(தனக்குச்) சமாந மாக ஒன்றில்லாத, இறை-பரமேசுரன், அறிவு ஆகி-அறிவு ரூப மாய், எங்கும்-சர்வ சரீரங்களிலும், நிறைந்து-பரிபூரண மாய், நிற்கும்-இருக்கும். எ-று. 9

மூலம் 4 துணைய தாயெமைத்.

சிவ போக சாரம் 96.

ஆர்பெரிய ரார்சிறிய ராருறவ ரார்பகைவர்,
சீர்பெரிய ராநந்த சிற்சொரூபர்-பேர்பெரிய,
ரெங்கெங்குந் தாமாயி ருந்துசட சித்தனைத்து,
மங்கங்கி யற்றுவத னல். 10

(இ-ள்) சீர் பெரியர்-சிறப்பு வாய்ந்த பெரியவரும், ஆநந்த சிற் சொரூபர்-சச்சிதாநந்த சொரூப முடையவரே, பேர் பெரியர்-நாமத்தில் பெரியவரும் ஆவர், எங்கு எங்கும்-(அவர்) எவ் வெவ் விடங்களிலும், தாமா யிருந்து-தானே யிருந்து, சட சித்து அனைத்தும்-ஜட சித்துக்கள் யாவற்றையும், அங்கு அங்கு-அவ் வவ் விடங்களில், இயற்றுவதனல்-பிரேரணை செய்வதால், பெரியர் ஆர்-பெரியவர் யாவர், சிறியர் ஆர்-சிறியவர் யாவர், உறவர் ஆர்-சுற்ற முடையார் யாவர், பகைவர்



ஆர்-விரோத முடையார் யாவர். எ-று. 10

மூலம் 5 கெடுவ தாம்பொருள்.

நீதி வெண்பா 46.

இன்னற ரும்பொருளை யீட்டுதலுந் துன்பமே,
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே-யன்ன,
தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பா,
லிழத்தலுந் துன்பமே யாம். 11

(இ-ள்) பொருளை-திரவியத்தை, ஈட்டுதலும்-சம்பாதிப்பதிலும், துன்பமே-துக்கமேயாகும், பின்-(கஷ்டப்பட்டுச் சம்பாதித்த) பின்பு, அதனை-அந்தத் திரவியத்தை, பேணுதலும்-(இராஜ, சோர, அக்கினி முதலியவற்றினின்றும்) காப்பதிலும், துன்பமே-துக்கமே யாகும், அன்னது-அப்படிக் காப்பாற்றிய திரவியத்தை, அழித்தலும்-செலவிடுவதிலும், துன்பமே-துக்கமே யாகும், அந்தோ-ஆச்சரியம், பிறர்பால்-பிறரிடத்தில் (கொடுத்து வைத்து), இழத்தலும்-(மீண்டும் வராம) லொழிதலினலும், துன்பமே யாம்-துக்கமே யாகும், இன்னல் தரும்-(ஆகலின் பொருள் எக் காலத்தும்) துன்பமே தரும். எ-று.
ஈட்டுதலும், பேணுதலும், அழித்தலும், இழத்தலும், என்ற உம்மைகள் எச்சப் பொருட்டு. 11

மூலம் 5 கெடுவ தாம்பொருள்.

திருக் குறள்-துறவு-35வது அதிகாரம்-1.

யாதனின் யாதனி னீங்கியா னோத,
லதனி னதனி னிலன். 12

(இ-ள்) யாதனின் யாதானின்-(ஒருவன்) யாதொரு பொருளினின்றும் யாதொரு பொருளினின்றும், நீங்கியான்-நீங்கினான், அதனின் அதனின்-(அவன்) அப் பொருளினால் அப்பொருளினால் (வரும்), நோதல்-துன்ப மடைதலை, இலன்-உடையவனாகான்.

எ-று. 12

மூலம் 5 கெடுவ தாம்பொருள்.

**சம்பந்த சுவாமிகள் திருக் கடைக் காப்பு-கோயில்-5.**

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்,
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற,
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய,
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே. 13

(இ-ள்) செல்வம்-சிறப்போடு, நெடு மாடம்-நீண்ட மாளிகையானது, சேண் ஓங்கி-ஆகாயத்தை அளாவி, சென்று-இருந்து, செல்வம்-இன்பம் தரும், மதி-சந்திரனை, தோய-பொருந்த, செல்வம்-செல்வமானது, உயர்கின்ற-(மேலும் மேலும்) விருத்தியாகின்ற, செல்வர் வாழ்-செல்வர்கள் வாழுகின்ற, தில்லை-தில்லையில், சிற்று அம்பலம்-சிற்றம்பலத்தின்கண், ஏய-பொருந்திய, செல்வன்-நட ராஜப் பெருமானது, கழல்-திருவடியை, ஏத்தும்-துதிக்கும், செல்வமே-செல்வமே, செல்வம்-செல்வ மாகும்.

எ-று. 12



மூலம் 6 தானைசூழ.

**நாலடியார்-செல்வம் நிலையாமை-3.**

யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்,
சேனைத் தலைவராய்ச் சென்றோரு-மேனை,
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட,
மனையாளை மாற்றார் கொள. 13

(இ-ள்) யானை-யானையினது, எருத்தம்-பிடரியின்மேல், பொலிய-(அழகுற) விளங்க, குடை-(வெண் கொற்றக்) குடையினது, நிழல் கீழ்-நிழலின் கீழிருந்து, சேனை-(ரத, கஜ, துரக, பதாதி) சேனைகட்கும், தலைவர் ஆய்-அதிபராய், சென்றோரும்-சென்றவர்களும், ஏனை வினை-தீ வினை, உலப்ப-(அச் செல்வத்தைக்) கெடுக்க, வேறு ஆகி-மாறுபட்டு, தாம் கொண்ட-தன்னால்- (கல்யாணம்) செய்யப்பட்ட, மனையாளை-பெண்சாதியையும், மாற்றார்-பகைவர், கொள-அபகரிக்க, வீழ்வர்-துன்ப மடைவார்கள். எ-று. சென்றோரும் என்ற உம்மை எச்சப்பொருட்டு. "மனையாளை" என்றதில், உம்மை தொக்கது. 13

மூலம் 6 தானைசூழ.

**வாசிட்டம்-5. உபசமப் பிரகரணம், சநக ராஜன் கதை-6.**

மெத்தென்ற சரித்திரத்தி னவர்தம்மை
யுலகெலாம் விரும்புந் தன்மை,
கொத்தொன்று வநமூங்கிற் குழலிசையான்
மகிழ்வி லங்கின் கூட்டம் போலு,

மித்தன்மை யாவருக்கும் பொதுமையினு
லியம்பியதா மிதனின் வேருய்ச்,
சத்தென்ற வழியிரண்டேழ் பவந்தீர்ப்ப
வர்க்கவற்றைச் சாற்றக் கேண்மோ. 14

(இ-ள்) மெத்து என்ற சரித்திரத்தின்-மிருது வான நடையை யுடைய, அவர் தம்மை-அம் மகான்களை, உலகு எல்லாம்-சர்வ ஜநங்களும், விரும்பும்-தன்மை-வழிபடும் தகைமை, கொத்து ஒன்று-கொத்திற் பொருந்திய, வந மூங்கில்-வந மூங்கிலின், குழல்-(புல்லாங்) குழலால் (உண்டாய), இசையால்-காநத்தால், மகிழ்-சந்தோஷத்தை யடையும், விலங்கின்-(வந) மிருக, கூட்டம் போலும்-சமுதாயம் போலும் ஆம், இத்தன்மை-இம் மார்க்கம், யாவருக்கும்-சர்வ தேகிகட்கும், பொதுமையினுல்-சாமாநிய மாக, இயம்பியது ஆம்-உபதேசித்த தாம், இதனின் வேறு ஆய்-இதனினும் அந்நிய மாய், ஏழ்பவம்-எழு வகைத் தேற்றத்தையும். தீர்ப்பவர்க்கு-மாற்றி மோக்ஷ மடைபவர்க்கு, சத்து என்ற-உத்தம மான, இரண்டு வழி-இரு கிரமங்கள் (உள்ளன). அவற்றை-அவ் விரண்டையும், சாற்ற-(யாம்) சொல்ல, கேண்மோ-(நீ) கேட்பாயாக, எ-று. "தம்மை", தம்-அசை. 14

மூலம் 6 தானே சூழ.

## பட்டிநத்துப் பிள்ளையார் பாடல்-பொது-27.

அண்ணறன் விதி யரசிருப் பாகு மணிபடையோர்,
நண்ணொரு நாலொன்ப தாமவ ரேவலு நண்ணுமிவ்வூர்த்,
துண்ணென் பசிக்கு மடைப்பள்ளி யானசு கமுமெல்லா,
மெண்ணிலி காலம வமேவி டுத்தன மெண்ணரிதே. 15

(இ-ள்) அண்ணல் வீதி-கடவுள் (எழுந்தருளி வரும், தேரோடும்) வீதி, அரசு-(யா னிருந்து) அரசாக்ஷி செய்யும். இருப்பு ஆகும்-(ராஜதாநி) இருப்பிட மாகும். அணி படையோர்-வரிசை வரிசை யாக உள்ள சேநா சைந்நியங்கள், நண்ணும்-பொருந்தி யுள்ள, ஒரு நால் ஒன்பது ஆகும்-முப்பத் தாறு தத்துவங்கள் ஆகும், அவர் ஏவலும்-அவர் (எனது) ஏவற்பணிவிடைகளை, நண்ணும்-செய்வார்கள், இவ் ஊர்-இத் திரு விடைமருதூரி லுள்ள இல்லங்கள், என் துண் பசிக்கு-எனக்கு மிகுத்து உண்டாகின்ற பசிக்கு, மடைப் பள்ளி-சமைக்கு மிடங்க ளாகும், ஆன எல்லாம் சுகமும்-இவ் வாருன சகல சுகங்களையும், எண் இலி காலம்-அள விறந்த காலம், அவமே-வீணுகவே, விடுத்தனம்-விட்டிருந்தேம், எண்ண அரிது-(இதை) நினைக்க நினைக்க மந வருத்த முண்டாகிறது. எ-று. தன்-ஏ-அசை. "ஏவலும்" என்ற உம்மை, "சுகமும்" என்ற உம்மை. முற் றும்மை. 15

மூலம் 7. காணியிதெம.

## சிவ தருமோத்தரம்-8-90.

மண்ணினுந் தனத்தினு மனைக்கு வாய்த்தநற்,
பெண்ணினு மகவினும் பெரிய பேரினுந்,
துண்ணென விழைவினைத் துறந்த தூயரே,
விண்ணினு மின்புடன் விளங்கி மேவுவார். 16

(இ-ள்) மண்ணினும்–பூமியினிடத்தும், தநத்தினும்–ஐசுவர்யத்தி னிடத்தும், மனைக்கு வாய்ந்த–(தனது) கிரகத்திற்கு அமைந்த, நல் பெண்ணினும்–கற்புடைய மனைவி யிடத்தும், மகவினும்–பிள்ளைகளிடத்தும், பெரிய பேரினும்–மிகுந்த கீர்த்தியினிடத்தும், விழைவினை–ஆசையினை, துண் என–அதிவிரைவாக, துறந்த–தியாகம் செய்த, தூயரே-பரிசுத்த மந முடைய மகான்களே, விண்ணினும்-தேவ லோகத்திலும், இன்புடன்-ஆநந்தத்தோடு, விளங்கி-தோன்றி, மேவுவார்–இருப்பார்கள். எ–று. மண்ணினும், தநத்தினும், பெண்ணினும், மகவினும், பேரினும், விண்ணினும், என்ற உம்மைகள், எச்சப் பொருட்டு. 16

மூலம் 7 காணி யீதெம.

திருக் குறள்-34 (நிலையாமை)-10.

புக்கில மைந்தின்று கொல்லோவு டம்பினுட்,
டுச்சிலி ருந்தவு யிர்க்கு. 17

(இ-ள்) உடம்பினுள்-(வாத முதலாகிய நோய்களின் வீடுக ளாகிய) உடம்புகளுள், துச்சில்இருந்த–ஒண்டுக் குடியாக இருந்தே வந்த, உயிர்க்கு–உயிருக்கு, புக்கு இல்–என்றைக்கும் இருப்ப தாகிய (ஒரு) வீடானது, அமைந்தின்று கொல்லோ-(இது வரையில்) அமைந்தில்லை போலும். எ–று. 17

மூலம் 8 தேர்கி லாயிவண்.



ஒழிவி லொடுக்கம்-(பொதுவில் உபதேசம்.) 56.

நாயேறி விழ்ந்தென் னடாத்துகிலென் ஞாநிக்குப்,
பேயாஞ்ச கம்ப ழித்தென் பேணுகிலென்–றோயார்,
பெருமை சிறுமையிலை பின்னு முன்னுமில்லை,
வரைவற்று வேண்டியசெய் வார். 18

(இ-ள்) நாய் ஏறி–நாயின் மேல் ஏறி, வீழ்ந்து என்–(கீழே) விழுந்தா லென்ன, நாடத்துகில் என்–(அந்த நாயை) நடத்தினு லென்ன (அது போல,) ஞாநிக்கு–(ஆந்ம நிஷ்ட) ஞாநிக்கு, பேய் ஆம் சகம்-பித்து உலகம், பழித்து என்-நிந்தித்தா லென்ன, பேணுகில் என்–துதித்தா லென்ன, தோயார்–(அவைகளில்) சம்பந்தப்படார், பெருமை இலை–(துதிப்பதால்) பெருமையு மில்லை, சிறுமை (இலை)–(நிந்திப்பதால்) சிறுமையும் (இல்லை), பின்னும் முன்னும்–சகல கேவலங்களும், இலை–இல்லை, வரைவு அற்று–நியதியில்லாமல், வேண்டிய–வேண்டியவைகளை, செய்வார்-செய்வார்கள். எ–று. 'இலை' என்பதைச், 'சிறுமை' என்பதனேடும் கூட்டுக. 18

மூலம் 8 தேர்கி லாயிவண்

பிரபு லிங்க லீலை–18(சாதக அங்க கதி) 19.

ஓடும் பொன்னு முறவும் பகையுமோர்,
கேடுஞ் செல்வமுங் கீர்த்தியு நிந்தையும்,
வீடுங் காநமும் வேறற நோக்குதல்,
கூடுந் தன்மைகொ ளுமந நன்மநம். 19

(இ-ள்) ஓடும்-ஓட்டையும், பொன்னும்-பொன்னையும், உறவும்-சிநேகத்தையும், பகையும்-பகைமையையும், ஓர்-(கருமாதிநமாப்) பொருந்திய, கேடும்-தரித்திரத்தையும், செல்வமும்-ஐசுவரியத்தையும், கீர்த்தியும்-கீர்த்தியையும், நிந்தையும்-நிந்தையையும், வீடும்-வீட்டையும், காநமும்-காட்டையும், வேறு அற-(இந்த 10யும்) அபேத மாக, நோக்குதல்-பார்த்தல், கூடும் தன்மை-பொருந்துந் தன்மை, கொளும் மநம்-கொண்ட மநமே, நல் மநம்-சுத்த சத்துவ மந மாம். எ-று. ஓடும், பொன்னும், உறவும், பகையும், கேடும், செல்வமும், கீர்த்தியும், நிந்தையும், வீடும், காநமும், என்ற 10 உம்மைகளும் எச்ச உம்மை. 19

மூலம் 9 உன்னு கின்றனே.

### சிவ போக சாரம்-8.

நாம் பெரிய ரென்னுமதை நாடாத டக்குமவர்,
தாம் பெரிய ரென்றுமறை சாற்றியிடு-நாம்பெரிய,
ரென்பார் சிறிய ரிவரலா திவ்வுலகிற்,
றுன்பார் சுமப்பார்கள் சொல். 20

(இ-ள்) நாம் பெரியர்-யாமே பெரியவர், என்னும் அதை-என்று உண்டாக்கின்ற அகங்காரத்தை, நாடாது-நினையாமல், அடக்குமவர்-அடக்கத்தோடு கூடியவர்களையே. பெரியர் என்று-மகான்க ளென்று. மறை சாற்றியிடும்-வேதங்கள் கோஷிக்கும். நாம் பெரியர்-யாமே பெரியவர், என்பார்-என்பவர்களே.



சிறியர்-சிறியோ ராவர், இவர் அலாது-இப்படிப் பட்டவர்களே அல்லாமல், இவ் உலகில்-இப் பூமியில், ஆர்-யாவர், துன்பு-துன்பத்தை, சுமப்பார்கள்-தாங்குவார்கள். சொல்-சொல்லுவாயாக. எ-று. தாம்-அசை. 20

மூலம் 10 ஓரி னுள்ளமே.

### பெருந் திரட்டு.

தீய வசுரர் பகையுண்டு செற்ற மார்வ மிகவுண்டு,
நோயுண் டநங்க னுருண்டு நோய்கட் கெல்லாந் தாயான,
காய முண்டு கைதொழவேண் டுநரு முண்டு கற்பத்தே,
மாயுந் தன்மை யுண்டானுல் வானேர்க் கென்னை
வளனுண்டே. 21

(இ-ள்) தீய அசுரர்-கொடிய இராக்ஷதர்களின், பகை உண்டு-விரோதம்(எப் பொழுதும்) உள்ளது, ஆர்வம்-இராகமும், செற்றம்-துவேஷமும், மிக உண்டு-மிகவும் உண்டு, நோய் உண்டு-நா லாயிரத்து நா னூற்று நாற்பத் தெட்டு வியாதியும் உண்டு, அநங்கனுர் உண்டு-மந்மத விகாரமும் உண்டு, நோய்கட்கு எல்லாம்-வியாதி முழுமைக்கும், தாய் ஆன-இருப்பிடமான, காயம்-உண்டு-சரீரமும் உண்டு, கை தொழ வேண்டுநரும்-நமஸ்கரிக்கத் தக்கவர்களும், உண்டு-(அந்தத் தேவலோகத்திலும்) உளர், கற்பத்து-கர்ப்ப (அந்தத்தில்), மாயும் தன்மை உண்டு ஆனுல்-இறக்குந்

தன்மை யுளதாயின், வானேர்க்கு-தேவர்கட்கு (மநி தரை விட), வளன் என்னே உண்டு-மாட்சிமை என்ன இருக்கிறது. எ-று. ஏ-ஏ-அசை. 21

மூலம் 10 ஓரி னுள்ளமே.

## ஆநந்தத் திரட்டு. (மெய்ஞ் ஞாந விளக்கம்)

தேவின்மா நுடத்திற் றுன்பந் திகழ்வதிப் பரிசே யென்ரு,
லாவகிழ் விலங்கு பக்கி யாதிதா வரமற் றெல்லா,
மோவிய துன்ப வெள்ளத் துழைத்தலோ ரளவு முண்டோ,
பாவமா நிரயந் தன்னிற் படுதுயர் பகரல் வேண்டா. 22

(இ-ள்) தேவின்-தேவப் பிறவியிலும், மாநுடத்தின்-மநுடப் பிறப்பிலும், துன்பம்-துக்கம், திகழ்வது-தோன்றுவது, இப் பரிசு-இந்தப் பிரகாரம், என்ருல்-ஆமாயின். ஆ அ-ஆச்சரியம், கீழ்-(இவ் விரு ஜந்மத்திற்கும்) தாழ் வான, விலங்கு-மிருகப் பிறவியிலும், பக்கி-பக்ஷிப் பிறவியிலும், தாவரம்-மரப் பிறவியிலும், மற்று ஆதி எல்லாம்-ஊர்வன, நீர் வாழ்வன, கல் முதலாய பிறவிகளிலும், ஓவிய-இடையருத, துன்ப வெள்ளத்து-துன்ப மாகிய வெள்ளத்திலே, உழைத்தல்-(கிடந்து) அவதி யுறுவதற்கு, ஓர் அளவும் உண்டோ-ஒரு எல்லே உளவோ, பாவ மாம் நிரயந் தன்னில்-பாபத்தால் உண்டாகின்ற (பெரிய) நரகத்தில், படு துயர்-அடைகின்ற துக்கத்தை, பகரல் வேண்டா-கூறமுடியாதாம். எ-று. ஏ-"நிரயம் தன்னில்" என்பதில் 'தன்' அசை. 22



மூலம் 11 அன்றெ னக்குநீ.

## சிவ தருமோத்தரம் 8 வது அத்தியாயம் கவி 21.

என்றென் றெண்ணி யிருக்குமுயி ரிடர்ப்பட் டழியு
மெழில்வரைக்கீ,
ழொன்று மொருவன் றனேப்போலக் கருப்பா சயப்பை
யுறுத்துதலான்,
மன்ற வுததி மறிந்தாழ்வான் வருத்த மென்ன வருந்தியிடு,
நின்ற கருப்பா சயவுதக வெள்ளங் கொள்ள
நிறையழிந்தே. 23

(இ-ள்) உயிர்-இந்த ஜீவ னுனவன் (இனி பூமியில் பிறவா நெறியை அடைவோம்), என்று என்று எண்ணி-எக் காலத்து என்று கருதி, இருக்கும்-இருக்கும், எழில் வரைக் கீழ்-அழகிய பருவதத்தின் கீழ், ஒன்றும்-அகப்பட்டுக் கொண்ட, ஒருவன்தனேப் போல-ஒருவன் (என்ன துன்பத்தை யடைவனே) அது போல, கருப்ப ஆசயப் பை-கருப்ப மிருக்கும் பையானது, உறுத்துதலால்-அமிழ்த்தலினுலே, இடர்ப்பட்டு அழியும்-(மநம்) அழிந்து துக்கத்தை அடையும், மன்ற-நிலே யாக உள்ள, உததி மறிந்து ஆழ்வான்-சமுத்திர(ஜல)த்தில் அமிழ்த்தப்பட்ட ஒருவன், வருத்தம் என்ன-(அடையும்) துன்பத்தைப் போல, நின்ற-பொருந்தி யிருக்கின்ற, கருப்ப ஆசய-கருப்பாசயப் பையில், உதக வெள்ளம் கொள்ள-ஜல மானது பூரித்தலினுலே, நிறை அழிந்து-(முன் தனக் குள்ள) ஞாபகம் கெட்டு, வருந்தியிடும்-துக்கத்தை அடையும்

எ-று. "ஒருவன்தனே" என்பதில் 'தன்' ஏ-அசை நிலைகள். 23

மூலம் 11 அன்றெ னக்குந்

சிவ தருமோத்தரம். 8 வது அத்தியாயம் கவி 22

அங்கி யதனிற் றங்கியிடு மயோ மயத்த கும்பத்திற்,
றங்கு மொருவன் றபநம்போற் றபந மெய்துந் தாயுதரத்,
தங்கி சுடவே யழலனைய சூசி யதனு லாகத்தைப்,
பங்கித் திடவே படுமிடறி னிருநாற் குணிதம் பட்டழுங்கும். 24

(இ-ள்) அங்கியதனில்-அக்கினியில், தங்கியிடும்-வைக்கப்பட்டு (காய்ந்த), அயோ மயத்த கும்பத்தில்-இருப்புக் கடாரத்தில், தங்கும்-ஒருவன் தபநம் போல்-இருத்தப்பட்ட ஒரு புருஷன் (எவ் வளவு) வேதனை அடைவ(னே அ)து போல, தாய் உதரத்து அங்கி சுட-மாதாவினது கர்ப்பத்தில் உதராக்கினி தகித்தலினலே, தபநம் எய்தும்-தாபத்தை அடையும். ஆகத்தை-(ஒருவனது) சரீரத்தை, அழல் அனைய-அக்கினியில் காய்ச்சப் பட்ட, சூசி அதனுல்-ஊசியினுலே, பங்கித்திட படும் இடரின்-குத்தினுல் எவ் வளவு துக்கத்தை யடைவனே அதனினும் (மாதா புசிக்கும் கார ஷார மான ஆகாரங்களினுல்), இரு நால் குணிதம்-எண் மடங்கு அதிக மான (துக்கத்தை), பட்டு அழுங்கும்-அடைந்து அழும் எ-று. ஏ-ஏ-அசை. "அங்கிய தனில்" அது, பகுதிப் பொருள் விகுதி. 24



மூலம் 11 அன்றெ னக்குந்.

சிவ தருமோத்தரம்- 8வது அத்தியாயம் கவி 23.

கருப்பா சயமே கட்டமதா மதனி னதிகங் கடுங்காலு,
முரிக்க மிகவு மோகமுற முன்னை யுணர்வு மந்நிலையே,
மரிக்க வாலைக் கரும்பெனவே யோநி வழியின் வழிதொலைய,
நெருக்கப் பட்டு நிலமிசையே தோன்று முயிரு னிலையுடனே. 25

(இ-ள்) கருப்ப ஆசயமே-கருப்பாசயப் பையில் கட்டுப்பட்டிருத்தலே, கட்டமது ஆம்-(மிகவும்) துன்ப மாம், அதனின்-அதைக் காட்டிலும், அதிகம்-அதிக மான துன்பமாம், கடும் கால்-கொடிய பிரசூத வாயு, முரிக்க-(தலை கீழாக) முறித்துத் தள்ளுதலினுலே, (மலையுச்சி மீதிருந்த ஒருவனைக் கீழே தள்ளினுலெப்படித் துன்பத்தை யடைவனே அது போல), மிகவும் மோகம் உற-மிகுந்த மயக்கத்தை அடைந்து தன் சுவாதீந மின்றி, முன்னை உணர்வும்-முன் (தனக்கிருந்த) ஞாநமும், அந் நிலையே மரிக்க-அப் பொழுதே நாசமடையவும், ஆலைக் கரும்பு என-ஆலையி லிட்ட கரும்பு (ரசம் வேறு செய்தவுடன் சக்கை பல மில்லாதது)போல, யோநி வழியின்-யோநித் துவாரத்தினுல், வலி தொலைய-(தனக் குள்ள) பல மெல்லாங் குன்ற, நெருக்கப்பட்டு-நெருக்கத்தை யடைந்து, உயிர்-ஜீவன், ஊன் நிலையுடன்-மாம்ச பிண்டமான சரீரத்தோடு, நிலம் மிசை-பூமியின் மேல், தோன்றும்-பிறக்கும். எ-று. ஏ-ஏ-அசை உம் சாரியை. 25

மூலம் 11 அன்றெ னக்குநீ.

குறுந் திரட்டு.

பரண மாகிய பெண்டிருஞ் சுற்றமும்
பண்டுதங் கையிற்றந்த,
விரண மானவை கொண்டிட விவரைவிட்
டியம்பிடா திவணேகு,
மரண வேதனை யாவரா லறியலா
மயங்கியைம் புலனந்தக்,
கரண மியாவையுங் கலங்கிட வருந்துயர்
கடவுளே யறிகிற்பார். 26

(இ-ள்) பரணம் ஆகிய-(தன்னால்) காப்பாற்றப் பட்ட, பெண்டிரும்-பெண் ஜாதியும், சுற்றமும்-சுற்றத்தவர்களும், பண்டு-பூர்வம், தம் கையில் தந்த-தன்னிடம் கொடுத்திருந்த, இரணம் ஆனவை-கடனை, கொண்டிட-வாங்கிக் கொள்ள, இவரை விட்டு-இந்தப் பெண் ஜாதி சுற்றத்தார் முதலியோரைப் பிரிந்து, இயம்பிடாது-(இவர்களிடம்) சொல்லிக் கொள்ளாது, இவண் ஏகும்-இச் சரீரத்தி லிருந்து (பிரிந்து ஜீவன்) செல்லுகின்ற, மரண வேதனை-மரண துக்கத்தை, யாவரால் அறியல்-ஆம்-எவரால் அறிந்து சொல்லமுடியும், ஐ புலன்-பஞ்ச இந்திரியங்களும், மயங்கி-(தத்தங் கோளகங்களிலிருந்து விஷயங்களை யறிய முடியாது) மயக்கத்தை யடைந்து, அந்தக் கரணம் யாவையும்-மநம், புத்தி, சித்தம், அகங்காரம் முதலான எல்லாம், கலங்கிட-கலக்கத்தை அடையும் படியாக, வரும் துயர்-வரப்பட்ட துன்பத்தை, கடவுளே-பரம சிவனே, அறிகிற்பார்-அறிவார், (மற்றவர்களால் அறிதல்கூடாது). எ-று. 26



மூலம் 11 அன்றெ னக்குநீ.

சிவ தருமோத்தரம் (மெஞ் ஞாந விளக்கம்)

வந்திடு மரணத் துன்ப மறித்துரை செய்யப் போமோ,
வுந்திமே லையும் பித்து முணர்வொடு பொறிக லங்கி,
நந்திடா விருளே மூடி நாவுலர்ந் தலமந் தென்னே,
யிந்தமா விறப்பிற் றுன்பம் பவத்துன்பத் தெண்ம டங்கே.
27

(இ-ள்) வந்திடும்-(கருமாதீநமாக) வாராநின்ற, மரணத் துன்பம்-மரண வேதனையை, மறித்து-(வேண்டாம் எனத்) தடுத்து, உரை செய்யப் போமோ-சொல்லக் கூடுமோ, ஐயும்-சிலேத்துமமும், பித்தும்-பித்தமும், மேல் உந்தி-மேற் கிளம்பி, உணர்வொடு-(நல்ல) ஞாந (மின்றி), பொறி கலங்கி-இந்திரியங்களும் கலக்கத்தை யடைந்து, நந்திடா-கெடாத, இருள் மூடி-(கண்கள் பஞ் சடைந்து) இருண் மயமாய், நா உலர்ந்து-நா வரட்சி யடைந்து, அலமந்து-(ஐயோ வென்று) அலறி, என்னே-என்னே, இந்த-இந்த, மா இறப்பில்-பெரிய மரண காலத்து (உண்டாகின்ற), துன்பம்-துக்கம், பவத் துன்பத்து-பிறக்கும் பொழுதிருக்கப்பட்ட துக்கத்தைக் காட்டிலும், எண் மடங்கு-எட்டு மடங்கு அதிக மாம். எ-று. ஏ-ஏ-அசை. 27

மூலம் 11 அன்றெ னக்குநீ

ஆநந்தத் திரட்டு (காசி காண்டம்)

கருவிடை யழுந்துந் துன்பமு நிலத்தின்
கண்ணுறிற் கொடியவெந் நோயான்,
மருவுவெந் துயரு நரைதிரை யெய்தி
வருந்திடுந் துன்பமுங் கூற்றா,
லுருவினை யொருவுந் துன்பமு மீட்டுங்
கருக்குழி யொன்றுறு துயரும்,
வெருவற வெண்ணி யின்பவீ டதனை
மேவநன் குணர்தலே வேண்டும். 28

(இ-ள்) கருவிடை-(மாதாவினது) கருப்பத்தில், அழுந்தும்-(ஐ வித அவஸ்தைகளினால்) வருத்த மடைகின்ற, துன்பமும்-துக்கத்தையும், நிலத்தின்கண்-இப் பூமியின்கண், உறில்-பிறந்த காலத்து, கொடிய-கொடி தான, வெம் நோயான்-வருத்துகின்ற வியாதியாதிகளினாலே, மருவு-அடைகின்ற, வெம் துயரும்-வெவ்விய துக்கத்தையும், (வயோதிகப் பருவத்தில்), நரை திரை எய்தி-(மயிர்) நரைத்தலும் (தோல்) சுருங்குதலும் அடைந்து, வருந்திடும்-வருத்த மடைகின்ற, துன்பமும்-துக்கத்தையும், கூற்றால்-யமனாலே, உருவினை-(மரண காலத்தில்) சூக்ஷ்ம சரீரத்தை, ஒருவும்-(நீக்கி யாதனா (சரீரத்தில்) புகும்படி செய்கின்ற, துன்பமும்-துக்கத்தினையும், மீட்டும்-மறுபடியும், கருக் குழி-கருப் பள்ளத்தில்(போய்), ஒன்று உறு-பொருந்தும்படி செய்கின்ற, துயரும்-துன்பத்தையும், வெரு வற எண்ணி-பயந்து விசாரித்துப் பார்த்து, இன்ப வீடு அதனை-மோக்ஷாநந்த மாகிற வீட்டை, மேவ-அடைதற் பொருட்டு, நன்கு-நன்றாக, உணர்தல்-(விசாரித்து) அறிய, வேண்டும்-வேண்டும். எ-று. ஏ-அசை. 28



மூலம் 11 அன்றெ னக்குந்.

### திருவாசகம் (ஆத்ம சுத்தி 1.)

ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற்
கன்பிலை யென்புருகிப்,
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை
பணிகிலை பாதமலர்,
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை
துணையிலி பிணநெஞ்சே,
தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை
செய்வதொன் றறியேனே. 29

(இ-ள்) துணை இலி பிண நெஞ்சே-(யாதொரு சகாயமு மில்லாத பிண மாகிய மநமே, கூத்துடையான்-சபையில் நடநம் செய்கின்ற நடராஜப் பெருமான் (சந்நிதியில்), ஆடுகின்றிலை-கூத்தாடினா யில்லை, கழற்கு-(அவரது) திரு வடிக்கண், அன்பு இலை-பக்தி செய்தா யில்லை, என்பு உருகி-(அநலிற் காட்டிய மெழுகு போல) என்பானது நெக் குருகும் படியாக, பாடுகின்றிலை-(அர அர மஹா தேவ என்று) பாடினா யில்லை, பதைப்பதும்-உடல் பதை பதைத்தலும், செய்கிலை-செய்தா யில்லை, பணிகிலை-(விழுந்து)நமஸ்கரிக்கின்றா யில்லை, பாத மலர்-(அவரது) திரு வடித் தாமரையை, சூடுகின்றிலை-(சிரசில்) சூடினா யில்லை, சூட்டுகின்றதும் இலை-(பூ மாலையை திரு வடிக்கு) சூட்டுகின்றா யில்லை, தேடுகின்றிலை-(அவரைத்) தேடினா யில்லை, தெருவு

தோறும்-வீதிக டோறும், அலறிலை-(நட ராஜப் பெருமானே யென்று) அலறினை யில்லை, செய்வது-(இன்னது) செய்வ தென்பதை, அறியேனே-(யான்) உணர்ந்தே னில்லையே. எ-று. பதைப்பதும், சூட்டுகின்றதும் என்ற உம்மைகள் எச்சம். 29

மூலம் 12 பூசை செய்து.

### திரு வாசகம் (அருட் பத்து. 8)

முத்தனே முதல்வா முக்கணா முனிவா
மொட்டரு மலர்பறித் திறைஞ்சிப்,
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யும்,
சித்தனே செல்வத் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீ,
ரத்தனே யடியேன் ஆதரித் தழைத்தா
லதெந்துவே யென்றரு ளாயே. 30

(இ-ள்) முத்தனே-(சர்வ பாச பந்தங்க) ளற்றவனே. முதல்வா-(சர்வத்திற்கும்) காரணமானவனே, முக்கணா-மூன்று கண்களை யுடையவனே, முனிவா-மநந சீலனே, மொட்டு அரு-இதழ்கள் விரியாத, மலர் பறித்து-(வாசனை யுள்ள) புஷ்பங்களைப் பிடுங்கி, இறைஞ்சி-(அர்ச்சித்து) வணங்கி, பத்தி ஆய்-பத்தி பூர்வகமாக, நினைந்து-ஸ்மரித்து, பரவுவார் தமக்கு-வழிபடுபவர்க்கு, பர கதி-உயர்ந்த மோக்ஷத்தை, கொடுத்து-கொடுத்து, அருள் செய்யும்-கிருபை பாலிக்கும், சித்தனே-சித் ரூபனே, செல்வ-செல்வ மோங்



கிய, திருப்பெருந் துறையில்-திருப்பெருந்துறையிலே, செழும்-செழுமை யுடைய, மலர்-மலர்களோடு கூடிய, குருந்தம் மேவிய-குருந்த மரத் தடியில் எழுந்தருளிய, சீர்-சிறப்பு வாய்ந்த, அத்தனே-எல்லாவற்றையும் தன்னுள் அடக்கியிருப்பவனே, அடியேன்-(நாயினுங் கடையே னாகிய) அடியேன், ஆதரித்து-ஆதரவோடு, அழைத்தால்-கூப்பிட்டால், அது எந்து என்று-அது என்னை? எனக் கேட்டு, அருளாய்-அநுக்கிரகிப்பாயாக. எ-று. தாம்-ஏ-ஏ-அசை. "எந்து" திசைச் சொல். 30

மூலம் 12 பூசை செய்து.

### திருக் குறள் 28-(கூடா வொழுக்கம்)

வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்,
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று. 31

(இ-ள்) வலி-(மநத்தைத் தன்வயப் படுத்தி யடக்கும்) வல்லமை, இல்-இல்லாத, நிலைமையான்-இயல்பினை யுடையவன், வல் உருவம்-(மநத்தைத் தந்வயப் படுத்தி யடக்கிய வல்லமை யுடையாரது) தவ வேடத்தை (க்கொண்டு தாம் அம் மநம் போனவழியே போதல்), பெற்றம்-பசுவானது (காவற்காரர் துறத்தா திருக்கும்படி), புலியின் தோல்-புலியினது தோலை, போர்த்து-போர்த்துக் கொண்டு, மேய்ந்து அற்று-(பயிரை) மேய்ந்தாற் போலும். ஆம்-எறு. 31

மூலம் 13 வாயி னுற்பல.

திருக் குறள்–84 (பேதைமை) 4.

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்,
பேதையிற் பேதையா ரில். 32

(இ-ள்) ஓதி–(மந மொழி மெய்கள் அடங்கு வதற்குக் காரண மாகிய நூல்களை) ஓதியும். உணர்ந் தும்–(அவ் வடக்கத்தால் வரும் பயனை) அறிந்தும், பிறர்க்கு உரைத்தும்–(அதனை அறியும் படி) பிறர்க்குச் சொல்லியும், தான் அடங்கா–தான் (அவை) அடங்கி யொழுகாத, பேதையில்–மூடன் போல, பேதையார்– மூடர், இல்–(உலகத்தில்) இல்லை. எ–று. உணர்ந்தும், உரைத்தும் என்ற உம்மைகள் எச்சப் பொருளன. 32

மூலம் 13 வாயி னுற்பல.

அறி வாநந்த சித்தியார் 24.

விரிந்தநல் வேதபு ராணங்க ளாகம மிக்ககலை,
தெரிந்தும்ப டித்துப்பொ ருள்செப்பித்
தா னிலை சேர்ந்து நில்லா,
திருந்தசண் டாளரி னேற்றங்க முதையெ ழிற்குங்குமம்,
பரிந்துசு மந்தும்பின் வஞ்சம்பண் ணுதப யனெழிலே. 33

(இ–ள்) விரிந்த–விரிவாக வுள்ள, உயர்ந்த (நான்கு) வேதங்களையும், னெண்) புராணங்களையும், ஆகமங்களையும், மிக்க கலை-சிரேஷ்ட மிக்க (அறு நல் வேதம்– புராணங்கள்–(பதி ஆகமம்–(இருபத் தெட்டு)



பத்து நான்கு) கலைகளையும், தெரிந்து–உணர்ந்து, படித்து–படித்து, பொருள்–(அதன்) அர்த்தங்களை, செப்பி–(பிறர்க்குச்) சொல்லியும், தான் நிலை-தான் அந்த வழியில், சேர்ந்து நில்லாது–பொருந்தி நிற்காமல், இருந்த–இருக்கப்பட்ட, சண்டாளரின்–சண்டாளர் களைப் பார்க்கினும், ஏற்றம்–உயர்வுடைத்து, கழு தை–கழுதை யாம், எழில்-(கழுதையானது) அழகு பொருந்திய, குங்குமம்-குங்குமத்தை, பரிந்து– வருத்த முற்று, சுமந்தும்–சுமந்தும், பின்–பின்னர், வஞ்சம் பண்ணுத–வஞ்சிக்காத, பயன்-எழிலே-பிர யோஜநமே மேன்மையாம். எ–று. "சுமந்தும்" என்ற உம்மை இழிவு சிறப்பு. 33

மூலம் 14 நாலு வேதமு.

பட்டிநத்துப் பிள்ளையார் பாடல் (கைலாயம் 3.)

சினந்தனை யற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று,
நினைந்தது மற்று நினையா ததுமற்று நின்மலனுய்த்,
தனந்தனி யேயிருந்த தாநந்த நித்திரை தங்குகின்ற,
வனந்தலி லென்றிருப் பேனத்த னேகயி லாயத்தனே. 34

(இ-ள்) அத்தனே-(சகல உலகங்களையும் தனதுள்) ளடக்குபவனே, கயிலாயத்தனே-கயிலை மலையில் வீற் றிருப்பவனே, சினந்தனை அற்று-வெறுப்பில்லாமலும், பிரியமும் அற்று–விருப்பில்லாமலும், செய்கை அற்று– நிஷ்கிரியனுகியும், நினைந்ததும் அற்று–சகல மல மற்று, நினையாததும் அற்று–கேவல மல மற்று (இரவு பக லற்று

என்றபடி), நின் மலம் ஆய்-பாவமற்றவனாய், தனம் தனியே-ஏகாந்தமாய இடத்திலே, இருந்து-(ஒருவனாக வே) இருந்து, ஆநந்த நித்திரை-பிரமாநந்த சமாதியை, தங்குகின்ற-பொருந்தி யிருக்கின்ற, அநந்தலில்-சுகத்தில், என்று இருப்பேன்-எப்பொழுது யா னிருப்பேனே. எ-று. சினந்தனை என்பதில் 'தன்' 'தான்' அசை. தன்னம் தனி என்பது, தனம் தனி என மெய் எழுத்து குறைந்தது. பிரியமும், நினையாததும், நினைந்ததும் என்ற உம்மைகள் எச்ச உம்மைகள். 34

மூலம் 14 நாலு வேதமு

### தேவிகாலோத்தரம்-(சமயாசாரம்)

சமயா சார சங்கற்ப விகற்பமு,
மமையா தாங்குல வாசார மானது,
மிமையா தாரும் விடாதவில் வாழ்க்கையு,
மமையார் தோளாய் விடுதலா சாரமே. 35

(இ-ள்) அமை ஆர் தோளாய்-மூங்கில் போத்து போன்ற தோளை யுடையவனே, சமய ஆசாரம்-அந்தந்தச் சமயங்கட் குள்ள ஆசாரங்களையும், சங்கற்பம்-சங்கல்பங்களையும், விகற்பம்-விகல்பங்களையும், அமையாது ஆம்-அவரவர்கட்குப் பொருந்துவன வின்றிய, குல ஆசாரம் ஆனதும்-குல ஆசாரங்களையும், இமையாதாரும்-இமையாத நாட்ட முடைய தேவர்களும், விடாத-விட்டு நீங்காத, இல் வாழ்க்கையும்-கிரஹ வாழ்க்கையும், விடுதல்-விட்டு ஒழிதலே, ஆசாரம்-



ஆசாரம் (என்று சொல்லப்படும்) எ-று. ஏ-அசை. 'இமையாதாரும்' என்பதில் உள்ள உம்மை, உயர்வு உடையோரும் என மநிதரை எச்சத்தால் உணர்த்திற்று. இமையாதார்-தேவர். 35

மூலம் 15 நெஞ்சமேயுட.

### பெருந் திரட்டு. குறுந் திரட்டு.

வில்வி ளங்கிய விண்ணவர் மிகுத்தவாழ் நாளும்,
மல்ல ரும்பக லென்னுமீர் வாளினா லரிந்து,
கொல்லும் வெங்கொடுங் கூற்றையார் குலைவுறார் குறுகி,
னல்வி ருந்தென வுவந்தெதிர் கொள்ளுவான் ஞாநி. 36

(இ-ள்) வில் விளங்கிய-பிரகாசம் பொருந்திய, விண்ணவர்-தேவர்கள், மிகுத்த-அதிகமா யுடைய, வாழ் நாளும்-ஆயுட் காலமும், அரும் அல் பகல்-அரிய இரவு பகல், என்னும்-என்று கூறப்பட்ட, ஈர் வாளினால்-கூர்மையுடைய இரண்டு வாளால், அறிந்து-சேதித்து, கொல்லும்-கொல்லாநின்ற, வெம் கொடும்-வெவ்விய கொடிய, கூற்றை-இயமனை (க் கண்டவுடன்), யார்-யாவர், குலைவுறார்-நடுக்கத்தை அடையாதவர் (ஒருவருமிலர்), குறுகின்-(யமன்) சமீபித்தால், ஞாநி-ஞாநி (ஒருவனே), நல் விருந்து என-நல்ல விருந்து (வந்தது) என்று, உவந்து-சந்தோஷித்து, எதிர் கொள்ளுவான்-எதிர் சென்று அழைப்பான். எ-று. "வாழ்நாளும்" என்றதில் உள்ள உம்மை மநிதர் ஆயுள் அற்பம் என்பதை உணர்த்திற்று. 36

மூலம் 15 நெஞ்சமேயுட.

### திருக் குறள். 1-4 (கடவுள் வாழ்த்து) 4.

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்,
கியாண்டு மிடும்பை யில.

(இ-ள்) வேண்டுதல்-(ஒரு பொருளை) விரும்புதலும், வேண்டாமை-வெறுத்தலும், இலான்-இல்லாத (இறை) வனது, அடி-பாதங்களை, சேர்ந்தார்க்கு-சேர்ந்தவர்க்கு, யாண்டும்-எக் காலத்திலும், இடும்பை-(பிறவித்) துன்பங்கள், இல-உண்டாவன வல்ல. எ-று. 37

மூலம் 16 தடுத்து மேலு.

### ஆநந்தத் திரட்டு.

மந்திரவாட் பெற்றும் பகைவெல்லான் மற்றதுகொண்,
டந்தோதன் மெய்யை யரிந்தான்போ னிந்தவுடல்,
கொண்டுமுத்தி செல்லுங் குறிப்பின்றிச் சிற்றின்பங்,
கண்டுவினைக் காளாங்க ணக்கு. 38

(இ-ள்) இந்த உடல்-இவ் வருமையான (மநுட) சரீரத்தை, கொண்டும்-பெற்றும், முத்தி செல்லும்-மோக்ஷ மடையும், குறிப்பு இன்றி-யத்தநம் செய்யாமல், சிற்று இன்பம்-சிற்றின்பத்தில், கண்டு-தோய்ந்து, வினைக்கு-பாவத்திற்கு, ஆள் ஆம்-ஆளாகும், கணக்கு-தன்மையானது (எது போலெனின்),



மந்திர வாள்-மந்திர வாளை, பெற்றும்-(முயற்சித்து) அடைந்தும், பகை வெல்லான்-சத்துருவை ஜயிக்காது, அந்தோ-ஆச்சரியம், அது கொண்டு-அந்த வாளைக் கொண்டு, தன் மெய்யை-தனது சரீரத்தை, அரிந்தான்-சேதித்துக் கொண்டவனை, போன்று-போல வாம். எ-று. மற்று-அசை "பெற்றும்" "கொண்டும்" என்ற உம்மை, "வெல்லான்" என்பது முற்று எச்சம் ஆயிற்று. 38

மூலம் 16 தடுத்து மேலு.

### ஞாந வாசிட்டம் 3 திதிப் பிரகரணம் பீம பாச திடர் கதை. 30

கையினு லறையுண்ணும் பந்து போலக்
காலனு லறையுண்டு கணக்கி லாத,
மெய்யிலே புகுந்தலுத்து விவேகம் பெற்றும்
விரகிலார் சிலர்பிறப்பின் மீண்டும் வீழ்ந்தார்,
மையினுன் மூன்றுலகாம் பணதி செய்து
வருநிற்கும் போமாகி வளர்ந்து வாளாப்,
பொய்யினுன் மிகவிரியும் வேலை யூடே
பொருதிரைபோற் பரபதத்தே புரிந்த மாயை. 39

(இ-ள்) கையினுல்-கையாலே, அறை உண்ணும்-அடிபட்டு (அடிக் கடி) எழும், பந்து போல-பந்தைப் போல, காலனுல்-யமனுல், அறை உண்டு-(இடைவிடாமல்) அடிபட்டு, கணக்கு இலாத-அளவில்லாத, மெய்யிலே-சரீரத்திலே, புகுந்து-பிரவேசித்து, அலுத்து-துக்க மடைந்து, விவேகம்-(கடைத் தேறும்

படியான) பகுத் தறிவு, பெற்றும்–உற்றும், விரகு இலார் சிலர்–வைராக்கிய மில்லாத சிலர். பிறப்பில்–சம்சார சங்கடத்தில், மீண்டும்–மறுபடியும், வீழ்ந்தார்–வீழ்ந்து வருந்தினர், மையினான்–மயக்க மாத்திரமாக, மூன்று உலகுஆம்–மூ வுலக மாகிய, பணதி செய்து–ஆபரணங்களைச் செய்து, வேலை யூடே–சமுத்திரத்தில், பொரு திரை போல்–(வீணாகவே) பொருதும் தரங்கமென்ன, பர பதத்தே–பரமபதமென்னும் (ஆன்மாவில்), புரிந்த மாயை–(மயல்) செய்யும் மாயை, வாளா வளர்ந்து–வீணாகவே விருத்தியை அடைந்து, பொய்யினால்–மித்தையாகவே, மிக விரியும்–(நிரந்தரம்) அதி விஸ்தாரத்தை அடையும், வரும் ஆகி நிற்கும்–பற் பல வாறாக விபரீதத்தை யடையும், போம்–விநாசத்தை யடையும். எ–று. "பெற்றும்" என்ற உம்மை, மீண்டும் என்ற உம்மை. முற்றும். 39

மூலம் 17 அகலு மிவ்வுடல்.

## குறுந் திரட்டு.

காயநீர்க் குமிழி யதிலுறு மின்பங்
கானலிற் புனலிது தனக்கிங்,
காயவித் துயர மளவிலை யதுநீ
யாய்வுரு மையிலழிந் தற்றாய்,
நீயினிக் கவலை நினைவெலா மொழித்து
நெஞ்சமே வந்தெனக் குடன்பட்,
டாயநற் சொருபற் கன்பதே யிசைந்தா
லரியதே தார்நமக் கெதிரே. 40



(இ–ள்) நெஞ்சமே–மனமே, காயம்–(இந்தச்) சரீரமானது, நீர் குமிழி–ஜலத்தி லுண்டாகும் குமிழிக்குச் சமானமாம், அதில்–அப்படிப்பட்ட சரீரத்தில், உறும்–பொருந்துகின்ற, இன்பம்–சுக மானது, கானலில் புனல்–கானல் நீருக்குச் சமமாம், இது தனக்கு–இப்படி கானல் நீருக்கு நிகரான சுகத்திற்கு, ஆய–(உண்டாவன) வாகிய, இத் துயரம்–இந்தத் துன்பத்திற்கு, அளவு இலை–கணக்கு இல்லையாகும், நீ அது–(மனமே) நீ அதனை, ஆய்வுருமையில்–விசாரித்துப் பாராமையால் அழிந்து–நாசத்தையடைந்து, அற்றாய்–கெட்டுப் போயினை, இனி நீ–இனி (மேல்) நீ, கவலை நினைவு–துக்கம் தரும் எண்ணங்கள், எலாம் ஒழித்து–எல்லாவற்றையும் விட்டு, வந்து–(விவேக மாகிய என்னுடன்) வந்து, எனக்கு–என்னுடன், உடன்பட்டு–(நீ) பிரியாதிருந்து, ஆய–(பிறவியை ஒழிப்பவர்) ஆகிய, நல்–சிரேஷ்டம் பொருந்திய, சொரூபர்க்கு–சொரூபாநந்த சுவாமிகட்கு, அன்பது–பக்தியை, இசைந்தால்–செய்தால், நமக்கு–நமக்கு, எதிர் யார்–சமம்–யா ரிருக்கின்றார் (ஒருவரும் இல்லை என்றபடி), எ–று. "இது தனக்கு" என்பதில், 'தன்' அசை அன்பது என்பதில், 'அது' பகுதிப் பொருள் விகுதி. 40

மூலம் 17 அகலு மிவ்வுடல்.

## திருவாசகம் தோணோக்கம். 1.

பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப்,
பேய்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே,
தீர்த்தாய் திகழ்தில்லை யம்பலத்தே திருநடஞ்செய்,
கூத்தாவுன் சேவடி கூடும்வண்ணம் தோணோக்கம். 41

(இ-ள்) பேய்த்தேர்-கானலை, பூத்து-(மலர்) பூத்து, ஆரும்-நீர் நிறைந்த, பொய்கைப் புனல்-குளத்தின் ஜலம், இதுவே-இதே, எனக் கருதி-என்று எண்ணி, முகக்க உறும்-முகக்க நினைக்கும், பேதை-அறியாமையுடைய குழந்தையின், குணம்-குணம் (போல), ஆகாமே-ஆகாமல், தீர்த்தாய்-ஒழித்தனே, திகழ்-விளங்காநின்ற, தில்லை-தில்லையிலே, அம்பலத்தே-சித் சபையிலே, திரு நடம் செய்-அழகிய நிர்தநஞ் செய்கின்ற, கூத்தா-ஆநந்தத் தாண்டவனே, உன் சே அடி-தேவரீரது திருவடியை, கூடும் வண்ணம்-அடையும்படியாக, தோள் நோக்கம்-(நாங்கள்) தோன் நோக்கம் என்னும் விளையாட்டை ஆடுவோ மாக. எ-று. 41

மூலம் 18 வாய்மை யிதுணர்ந்.

திருக் குறள் 34 நிலையாமை 7.

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப,
கோடியு மல்லப ல. 42

(இ-ள்) ஒரு பொழுதும்-(அறிவில்லாதவர்) ஒரு பொழுதளவும், வாழ்வது-(தம் முடம்பும் உயிருங் கூடி) இருத்தலை, அறியார்-அறியமாட்டார் (அறியமாட்டாதிருந்தும்), கோடியும் அல்ல-கோடி யளவு மின்றி, பல-(கோடியிலும்) பல வாகிய நினைவுகளை, கருதுப-நினையாநிற்பர். எ-று. "பொழுதும்" என்ற, உம்மை. எச்சப் பொருட்டு. 42

மூலம் 18 வாய்மையி துணர்ந்.

ஔவையார்-நல் வழி. 28.

உண்பது நாழியு டுப்பது நான்குமுழம்,
எண்பது கோடிநினைந் தெண்ணுவன-கண்புதைந்த,
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின்கலம்போலச்,
சாந்துணையுஞ் சஞ்சலமே தான். 43

(இ-ள்) உண்பது-சாப்பிடுவது, நாழி-நாழி (அரிசி அன்ன மாகும்). உடுப்பது-(அறையில்) கட்டிக் கொள்வது, நான்கு முழம்-நாலு முழ வஸ்திரமாகும் (அப்படிக் கிருக்க), நினைந்து-(மநதில்) எண்ணி, எண்ணுவன-சிந்திப்பன, எண்பது கோடி-எண்பது கோடி யாகும், கண் புதைந்த-(அஞ்ஞாநத்தால்) கண் குருடாக்கப்பட்ட, மாந்தர்-மநிதர்களது, குடி வாழ்க்கை-இல்லற வாழ்க்கை, மண்ணின்-மண்ணினாலே (செய்யப்பட்ட), கலம் போல-பாண்டம் போல, சாம் துணையும்-சாகும் பரியந்தமும், சஞ்சலமே-துக்கமே யாகும். எ-று. தான்-அசை. 43

மூலம் 19 தருவ நீமையி.

பெருந் திரட்டு

இல்லின்ப மிகழ்ந்து பேரின்பம் வேண்டி
யெழிற்குரு வருடனின் மேலா,
நல்லுணர் வதனைப் பெற்றொரே காந்த
நண்ணியே சமாதியிற் றொடங்கி,
யல்பக னேக்க னரவமாட் டிடுவோ
னறைதரு பணிக்கண்மீ காமன்,
வல்கரிப் பாகன் போலநோக் குவர்க்கு
மனையின்மீட் டிச்சையு மெழுமோ. 44

(இ-ள்) இல் இன்பம்-(சிற்றின்ப மாகிய) விஷயா நந்தத்தை, இகழ்ந்து-வெறுத்து, பேர் இன்பம்-பிர மாநந்தத்தை, வேண்டி-விரும்பி, எழில்-(கருணை முதலிய) அழகிய குணங்கள் வாய்ந்த, குரு-குரு மூர்த் தியினது, அருள் தனின்-கிருபையினாலே, மேலாம்-உயர் வாகிய, நல் உணர்வு அதனை-ஆன்ம ஞானத்தை, பெற்று-அடைந்து, ஒரு ஏகாந்தம்-ஒப் பற்ற ஏகாந்த ஸ்தானத்தை, நண்ணி-பொருந்தி யிருந்து, சமாதியில்-சமாதியை, தொடங்கி-அப்பியாசித்து, அல் பகல்-இரவும் பகலும், நோக்கன்-கூத்தாடியைப் போலவும், அரவம்-பாம்பு (தன்னைக் கடியாதபடி), ஆட்டிடு வோன்-ஆட்டுகின்றவனைப் போலவும், அறை தரு-சொல்லாநின்ற, பணிக்கன்-சாராயம் காய்ச்சுபவன் போலவும், மீகாமன்-(கப்பலைச் செலுத்துகின்ற) மாலுமியைப் போலவும், வல்-வலிமை பொருந்திய, கரிப் பாகன்-யானைப் பாகன், போல-போன்றும், நோக்குவர்க்கு-பார்த்துக் கொண்டிருக்கின்ற மகாத் மாக்கட்கு, மனையில்-கிரகஸ்தாசிரமத்தில், மீட்டு



உம்-மறுபடியும், இச்சை-ஆசை, எழுமோ-உண் டாகுமோ? (உண்டாக மாட்டாது) எ-று. ஏ-அசை. அருள்தனின் என்பதில், 'தன்' அசை. மீட்டும் என்ற உம்மை, எச்ச உம்மை. உணர்வதனை என்பதில், 'அது' பகுதிப் பொருள் விகுதி. உம்மை பிரித்துக் கூட்டப் பட்டது. 44

மூலம் 20 ஆமுன் இச்சையே.

### திருக் குறள். 37 அவா அறுத்தல் 1.

அவா வென்பவெல் லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந்,
தவாஅப் பிறப்பீனும் வித்து. 45

(இ-ள்) எல்லா உயிர்க்கும்-உயிர்க ளெல்லாவற் றிற்கும், எஞ் ஞான்றும்-எக் காலத்திலும், தவா-கொடாது (வருகின்ற), பிறப்பு-பிறவியை, ஈனும்-உண்டாக்கும், வித்து-காரணம், அவா-ஆசை யாகும், என்ப-என்று (நூலோர்) சொல்லுவர். எ-று. 45

மூலம் 20 ஆமு னிச்சையே.

### ஞாந வாசிட்டம் 5 உபசமப் பிரகரணம், மாவலி கதை 4வது பாட்டு.

இச்சையாம் விறகு மாண்டா லெண்ணமாம் வன்னி மாளு,
நிச்சய மாகுந் தேயத் தியாகமா நெடுந்தே ரேறி,
மெச்சிய வுதாரக்கண்ணால் வேட்கையான் மிகவும் வாடுங்,
கொச்சைஞா லத்தை நோக்கிக் குறைவற விருப்பாய் தீரா. 46

(இ-ள்) இச்சை ஆம்-ஆசை யாகிய, விறகு மாண்டால்-இந்தநம் தீர்ந்தால், எண்ணம் ஆம்-சிந்தை யாகிய, வன்னி மாளும்-தீ தீர்ந்து போம், நிச்சயம் ஆகும்-துணி பாகும், தேயத் தியாகம் ஆம்-தேயத் தியாக (மென மொழிந்த). நெடும் தேர் ஏறி-பெருந் தேரில் ஆரோகணித்து. மெச்சிய-புகழும். உதாரக் கண்ணுல்-கருணோதார திருஷ்டியால், வேட்கையால்-ஆசையால், மிகவும் வாடும்-அத்தியந்தம் வாட்டத்தை யடையும், கொச்சை-தீன மான. ஞாலத்தை-ஜகத்தை, நோக்கி-பார்த்து, குறைவு அற-பரிபூரண ஆநந்த பரித ருகி, இருப்பாய்-வாழ்வாய், தீரா-தைரியசாலி யாகிய இராகவனே. எ-று. ''தியேயம்'' என்பது. தேயம் என விகாரம் ஆயிற்று. 46

மூலம் 21 நாம ரற்கருச்.

### ஆநந்தத் திரட்டு.

எப்பொருள் களுந்தா ருகி யிலங்கிடு மறிவா மிச,
னப்படி விளங்கு கின்ற தறிதலே யவன்ற னக்கு,
மெய்ப்படு பூசை வேறோர் செயலினு லன்று மெய்யே.
யிப்படி ஞாநத் தன்னு லிறைஞ்சிடப் படுவா னீசன். 47

(இ-ள்) ஈசன்-பரமேசுரன், எப் பொருள்களும்-சர்வ திருசிய, தான் ஆகி-ரூப மாகி, இலங்கிடும்-விளங்காநிற்கும், அறிவு ஆம்-ஆந்ம ரூப மாம், அப்படி-அவ் வாறு (ஆந்ம சொரூப மாக), விளங்குகின்றது-விளங்கிக்கொண்டிருப்பதை, அறிதலே-(விசாரத்தால்) உணருதலே, அவன் தனக்கு-அப் பரமேசுரனுக்கு, மெய் படு பூசை-சத்திய மாகச் செய்யும் பூசனை யாம், வேறு ஓர்-(இவற்றிற்கு) அந்நிய மான ஓர், செயலினுல்-கிரியையினுல், அன்று-(பூசிப்பது பூசனை) யல்ல வாம், மெய்யே-(இது) சத்தியமே யாகும். இப்படி-இந்தப் பிரகாரம், ஞாநம் தன்னுல்-(சர்வ திருசிய விஸ்மரண ரூப) ஞாநத்தினுல், ஈசன்-பரமேசுரன், இறைஞ்சிடப்படுவான்-நமஸ்கரிக்கப்படுவான். எ-று. ''அவன் தனக்கு'', ஞாநம் ''தன்னுல்''. என்பவற்றில் 'தன்' 'தன்' அசை. 47



மூலம் 22 நீமெய்ஞ் ஞாநநன்.

### கந்த ரநுபூதி 12.

செம்மான் மகளைத் திருடுந் திருடன்,
பெம்மான் முருகன் பிறவா னிறவான்,
சும்மா விருசொல் லறவென் றலுமற்,
றம்மா பொருளொன் றுமறிந் திலனே. 48

(இ-ள்) செம்-சிறந்த, மான் மகளை-வள்ளி தேவியை, திருடும்-அபகரித்த, திருடன்-கள்வனுகும், பெம்மான்-பெருமையிற் சிறந்தவன், முருகன்-முருகக் கடவுள். பிறவான்-ஜநியான், இறவான்-மரியான் (ஆகலின்). சொல் அற-மௌநமாக. சும்மா இரு-(மநோ) வியாபார மின்றி இரு, என்றலும்-என உபதேசித்தலும், அம்-அந்த, மா-பெரிய, பொருள்-வஸ்து, ஒன்றும்-ஒன்றையும், அறிந்திலன்-(யான்) உணர வில்லை. எ-று. ஏ-அசை. 48

மூலம் 22 நிமெய்ஞ் ஞாநநன்

**ஞாந வாசிட்டம் 2 முமுக்ஷுப் பிரகரணம் 2–4.**

மிகமுயன்று வருந்தாமற் சமமா கின்ற வேண்டு
கொளாற் றன்முயல்வால் விநோதந் தன்னாற்
பகர்மநமாஞ் சிறுமகவை நிறுத்தல் வேண்டும்
பலபிறப்பிற் பரிசயங்க ளகலப் பண்ணி–
யகல் சுபவா தனையுதித்தான் முயற்சி பேரு
மையுறினுஞ் சுபமுயல்வை யதுதீ தல்ல–,
திகழ்மநம்போய்த் தற்ப தத்தைத் தெளியு மட்டுந்-
தேசிகனால் சொல்வழியிற் செல்லு வாயே. 49

(இ–ள்) மிக முயன்று–அதிகமான (பிராணாயாமம் முதலியவற்றால் நிரோதம் செய்யக் கருதி) முயற்சி செய்து, வருந்தாமல்–(அதனால்) வருத்த மடையாமல், சமம் ஆகின்ற–சமாதாந மாகிற, வேண்டு கொளால்–விண்ணப்பங்களினாலும், தன் முயல்வால்–புருஷப் பிரயத்நத்தாலும், விநோதம் தன்னால்–விநோதக் கதைகளினாலும், பகர் மநம் ஆம்–சொல்லாநின்ற மநமாகிய, சிறு மகவை–சிறிய குழந்தையை, நிறுத்தல் வேண்டும்–நிரோதஞ் செய்ய வேண்டும், பல பிறப்பின்–அநேக ஜநநங்களின் (ஏதுவாக வந்துள்ள), பரிசயங்கள்–வாசனைகள், அகலப் பண்ணி–நீங்கும்படி செய்து, அகல்–தன்னிடத்திருந்து நீங்கியுள்ள, சுப வாதனை–சுத்த வாசனை, உதித்தால்–உண்டாகு மாயின், முயற்சி பேறும்–(புருடன் செய்த) பிரயத்நத்திற்கு



பிரயோஜந மாம், ஐ உறினும்–சம்சய மடையினும், சுபம் முயல்வை–நன்மையிலேயே முயற்சிப்பாய், அது தீது அல்ல–அது குற்றமு மாகாது, திகழ்–விளங்கா நின்ற, மநம் போய்–(தூல) மந மானது போய், தத்பதத்தை–(அந்த) தத்பத இலக்ஷியார்த்த பிரஹ்மத்தை, தெளியு மட்டும்–பொருந்தும் பரியந்தம், தேசிகன்–ஆசிரிய ருபதேசித்த பிரகாரமும், நூல் சொல் வழியில்–சாஸ்திரம் கூறும் மார்க்கத்திலும், செல்லுவாய்–அநுட்டிப்பாயாக. எ–று. ஏ–அசை. "விநோதம் தன்னால்" என்பதில், தன் அசை. "உறினும்" என்ற உம்மை. எச்ச உம்மை. 49

மூலம் 23 நின்று ருதலே.

**பகவற் கீதை 6 வது யோக அத்தியாயம் கவி 19.**

வாங்கி யைம்பொறி நின்றம நந்தினை,
நீங்கி டாவகை நின்னுளி ருத்தியே,
தீங்கி யாவையுஞ் சிந்தைசெ யாமையாம்,
பாங்கி யாதது வேபயில் வாயரோ. 50

(இ–ள்) ஐ பொறி–(உருவம் முதலிய) பஞ்ச விஷயங்களில், நின்ற–(சஞ்சரித்து) நிற்கின்ற, மநத்தினை–மநத்தை, வாங்கி–(வைராக்கியத்தின் ஏதுவாதி உபாயங்களால் உள்ளே) இழுத்து, நீங்கிடா வகை–(லய ரூப மான) நித்திரை யடையாதபடி, நின்னுள்–பிரத்தியக் ஆத்மாவின்கண்ணே, இருத்தி–நிரோதமாகப் பண்ணி, தீங்கு யாவையும்–(விக்ந மாகலின்)

யாதானும் ஓர் அநாந்ம பதார்த்தத்தை யாவது, பிரத்தியக் ஆந்மாவை யாவது, சிந்தை செயாமை ஆம்-சிந்திக் காமையாகிய, பாங்கு-தன்மையினை யுடைய, யாது-(அப்பியாசம்) எதுவோ, அதுவே-அவ் வுபாயத்தை யே, பயில்வாய்-பழகுவாய். எ-று. ஏ. அர்-ஓ-அசை நிலை. 50

மூலம் 23 நின்று ருதலே.

## தேவிகாலோத்தரம்.

மந்திரஞ் செபந்தி யாநம் பூசனை வணக்கம் வேண்டா,
வந்தமி லாத முத்திக் குபாயமே யறிய வேண்டுஞ்,
சிந்தனை புறனே செல்லிற் றுயரமே திரிய மீட்கிற்,
பந்தமாந் துன்ப நீங்கிப் பரமான வின்பஞ் சேர்வார். 51

(இ-ள்) மந்திரம்-(வேதத்திற் கூறி யுள்ள பிரண வாதி) மந்திரங்களும், ஜெபம்-(பஞ்சாக்ஷர, அஷ்டாக்ஷர) ஜெபங்களும், தியாநம்-(சகுண, நிர்க்குணத்) தியாந மும், பூசனை-(பத்ர புஷ்பங்களைக் கொண்டு) அர்ச்சிப் பதும், வணக்கம்-(காயத்தால்) நமஸ்கரிப்பதும், வேண்டா-(இவைக ளெல்லாம் புநர் ஜெந்மத்திற்குக், காரணங்களா மென்று தவிர்த்து, அந்தம் இலாத-நாச மில்லாத, முத்திக்கு-மோக்ஷ மடைதற்கு, உபாயமே-உபாயமே, அறிய வேண்டும்-உணர வேண்டும். சிந்தனை-(அதாவது) மநம், புறனே-பகிர் முக மாக, செல்லில்-சென்றால், துயரமே-துக்கத்திற்கு ஏதுவாம். திரிய-மறுபடியும் (மநதை), மீட்கில்-உண்முக மாக்கி



னுல், பந்தம் ஆம்-பந்த காரண மாகிய, துன்பம் நீங்கி-துக்கம் நிவர்த்தி யாகி, பரம் ஆன-மே லான, இன்பம்-பிரமாநந்தத்தை, சேர்வார்-அடைவார்கள். எ-று. 51

மூலம் 24 கண்ட வைம்புல.

## சசி வர்ண போதம் (81.)

[மாறியே,
வினவிற்ப ரத்தையறி வுறுதற்க வத்தைபுலன் வினை
நநவிற்சு ழுத்திநிலை வரினப்பொ ருட்டிகமு நலமாகவே. 52

(இ-ள்) பரத்தை-பிரமத்தை, அறிவுறுதற்கு-அறிய வேண்டி, அவத்தை-(எந்த) அவஸ்தையில் கூடும் என்று, வினவில்-கேட்பாயாகில், புலன்-(அவத்தைகளும்) இந்திரியங்களும், வினை-(தத்தம்) தொழில்களும், மாறி-நீங்கி, நனவில்-சாக்கிராவஸ் தையில், சுழுத்தி நிலை-சுழுத்தி யவஸ்தையின் தன்மை, வரின்-உண்டாமாயின், அப் பொருள்-அப் பிரம வஸ்து, நலம் ஆக-ஸ்பஷ்ட மாகவே, திகழும்-விளங் கும். எ-று. ஏ-ஏ-அசை 52

மூலம் 25 புகல ரும்பரப்.

## திரு வம்மானை.

பார்த்தவிட மெல்லாம் பரமன்கா ணம்மானை,
பாராம லிந்நாளும் பாழ்பட்டே னம்மானை. 53

(இ-ள்) பார்த்த-பார்க்கப்பட்ட, இடம் எல்லாம்-இடங்களெங்கும், பரமன்-பரமேசுவரனது ரூப மாகவே யிருக்கின்றது, அம்மானை-அம்மானை, பாராமல்-(இதை விசாரித்துப்) பாராமல், இந் நாளும்-இவ் வளவு காலமாக, பாழ்பட்டேன்-வீணுயினவனுனேன், அம்மானை-அம்மானை, எ-று. காண்-முன்னிலை அசை அம்மானை ஆடல் ஓர் விளையாட்டு. 53

மூலம் 25 புகல ரும்பரப்.

### சிவாநந்த மாலை.

எங்குஞ்சி வமொழிய வில்லையவன் றன்னாணை,
யங்கந்தி ரள்கருவி யாணவமாம்-பொங்குமிருண்,
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்,
பொய்பொய்பொய் பொய்பொய்பொய் பொய். 54

(இ-ள்) எங்கும்-எல்லாவிடத்தும், சிவம் ஒழிய-சிவ ரூபத்தைத் தவிர்த்து, இல்லை-(வேறென்றும்) இல்லை, அவன்-அந்தப் பரமேசுவரன் மீது, ஆணை-சத்தியம், அங்கம்-(தூல) சரீரம், பொய்-மித்தை, திரள் கருவி-கூட்டமா யுள்ள இந்திரியங்கள், பொய்-மித்தை, ஆணவம் ஆம்-அகங்கார மாகிய, பொங்கும்-மிகுந்துண்டாகின்ற, இருள்-அஞ்ஞானம், பொய்-மித்தை, மை செய்த-பிராந்தியினுல் உண்டாகின்ற, மா மாயை-பெரிய மாயையும், பொய்-மித்தை, மாயை-(காரிய) மாயையும், பொய்-மித்தை, வினை பொய்-புண்ணிய பாவ மனைத்தும் பொய், மற்று அனைத்தும்-மற்றை யாவும், பொய்-மித்தையே யாகும். எ-று. தன்-அசை. ஏழு மித்தை. 54



மூலம் 26 நெஞ்ச மேயினி.

### ஞாந வாசிட்டம்-3 திதிப் பிரகரணம்-தாசூரன் கதை கவி 104.

அறிவெனும் விதைசங் கற்பமா முளையா
மனையசங் கற்பமாந் தன்னைப்,
பிறிவுறத் தானே செய்துதான் பிறக்கும்
பெரிதுற வளர்ந்திடுந் தானே,
செறிதுய ரொழிய வின்பமொன் றில்லை,
யாதலாற் செப்புசங் கற்ப,
நெறியுற நினையே னிற்புறு நிலையி
னிமிடமும் பாவனை நினையேல். 55

(இ-ள்) அறிவு எனும் விதை-சித்தாகிய பீஜம், சங்கற்பம் ஆம்-சங்கல்ப மாகிய, முளை ஆம்-அங்குரமாம், அனைய-அத் தகைய, சங்கற்பம் ஆம் தன்னை-சங்கற்ப மாகிய தன்னை, பிறிவுறத் தானே செய்து-பேத மாகத் தானே இயற்றி, தான் பிறக்கும்-தான் உண்டாம், பெரிது உற-பெரிதாகவே, தானே வளர்ந்திடும்-தானே விருத்தி யாகும், செறி துயர் ஒழிய-பொருந்தாநின்ற துன்பமே யல்லாது, இன்பம் ஒன்று இல்லை-இன்ப மென்பது அணு வளவுங் கிடையவே கிடையாது, ஆதலால்-ஆகையினுல், செப்பு-சொல்லிய, சங்கற்ப-சங்கற்பத்தை, நெறி உற நினையேல்-சங்கற்பியாதே, நிற்புறும் நிலையில்-இத் திதியில், நிமிடமும்-

கணப் போதும், பாவனை-அநுபவித்ததை, நினையேல்-எண்ண வேண்டாம். எ-று. "தன்னை" என்பதில், 'தன்' அசை. 55

மூலம் 26 நெஞ்ச மேயினி.

## குறுந் திரட்டு.

அண்டமெண் டிக்கெங் கண்ணு மடங்கச்சூ நியம தாகக்,
கண்டுகொண் டிருக்கக் கண்ட கருத்தையு மறவே விட்டா,
லண்டமெண் டிக்கெங் கண்ணு மாய்நின்ற
வாநந் தத்தைக்,
கண்டுகொண் டிருக்கும் வண்ணங் கணத்தில்வந்
துதிக்கு மன்றே. 56

(இ-ள்) அண்டம்-(பிரம) அண்டமும், எண் திக்கு-எட்டுத் திக்குகளும், எங்கண்ணும்-கீழ் மேல் மற்ற எல்லாவிடங்களிலும், சூநியமது ஆக-சூநிய ரூபமாய், அடங்க-லயிக்க, கண்டு கொண்டு-பார்த்துக் கொண்டு, இருக்கக் கண்ட-இருக்கப் பார்த்த, கருத்தையும்-மநத்தையும், அறவே-அத்தியந்தம், விட்டால்-நீக்கினால், அண்டம்-(பிரம) அண்டமும், எண் திக்கு-எட்டுத் திக்குகளும், எங்கண்ணும்-கீழ் மேல் மற்ற எல்லா விடங்களிலும், ஆய்-ஆக, நின்ற-இருக்கப்பட்ட, ஆநந்தத்தை-ஆநந்தத்தை, கண்டு கொண்டு-பார்த்துக் கொண்டு, இருக்கும் வண்ணம்-இருக்கும்படி-கணத்தில்-க்ஷண நேரத்தில், வந்து உதிக்கும்-(ஆநந்த ரூப விருத்தி) வந்து தோன்றும். எ-று.



அன்று-ஏ-அசை. "சூநியமது" என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. "கருத்தையும்" என்றதில், உம்மை. எச்சப் பொருட்டு. 56

மூலம் 26 நெஞ்ச மேயினி.

## திரு வாசகம், தோ ணோக்கம் 5.

நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்,
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப்புணர்ந்துநின்றான்,
உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே,
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ. 57

(இ-ள்) நிலம்-பிருதிவியும், நீர்-அப்பவும், நெருப்பு-அக்கினியும், உயிர்-வாயுவும், நீள் விசும்பு-விரிந்த ஆகாயமும், நிலா-சந்திரனும், பகலோன்-சூரியனும், புலன் ஆய-ஜீவ ரூபமாகிய, மைந்தனோடு-புமானோடு, எண் வகை ஆய்-அஷ்டமங்கள மூர்த்தமாக, புணர்ந்து நின்றான்-சேர்ந்து இருக்கின்றான், உலகு ஏழு என-ஏழுலக மாகவும், திசை பத்து என-பத்துத் திக்குகளாகவும், தான் ஒருவனுமே-தான் ஒருவனே, பல ஆகி-அநேக ரூபமாக, நின்ற ஆ(று)-நிற்கும் தன்மையை உணர்ந்து, தோள் நோக்கம்-தோள் நோக்கம், (என்னும் ஆட்டத்தை) ஆடாமோ-ஆடுவோம் எ-று. 57

மூலம் 26 நெஞ்ச மேயினி.

**தத்துவ ராயர் அடங்கன் முறை. (அமிர்த சாரம் ஆசாரியன் மகிமை. 183.)**

உள்ளத்தி ருந்துமொ ளித்தான்ப ரன்குரவன்,
கள்ளந்த னைத்தவிர்த்துக் காட்டினன்-வள்ள,
லருவான கோலமோ வக்கோலங் காட்டுங்,
குருவான கோலமோ கூறு. 58

(இ-ள்) உள்ளத்து இருந்தும்-(என்) இருதயத்திற்குள் ளிருந்தும், ஒளித்தான்-(யான் அறியமாட்டாது) ஒளித்திருந்தான், பரன்-(மேலான) பரமசிவன், குரவன்-ஆசிரியன், கள்ளந்தனை-(என்னு லறிய முடியாதிருந்த அக்) கபடத்தினை, தவிர்த்து-நிவிர்த்தித்து, காட்டினன்-அறிவித்தான், வள்ளல்-தாதா, அருவு ஆன-சூக்ஷ்ம ரூப மான ஈசுவர, கோலமோ-தன்மையோ, அக் கோலம் காட்டும்-அந்த சூக்ஷ்ம வஸ்துவை உபதேசிக்கும், குரு ஆன-குரு மூர்த்தி யாகிய, கோலமோ-உருவமோ, கூறு-(நீ) அறிவிப்பாயாக. எ-று. "இருந்தும்" என்ற உம்மை, எச்சப் பொருட்டு. "கள்ளந்தனை" என்பதில், தன் அசை. 58

மூலம் 27 உய்து நெஞ்சமே.

**திருக் குறள் 13 (அடக்கம் உடைமை 7.)**

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்,
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 59



(இ-ள்) யா-(தம்மால் காக்கப்படுவன வாகிய) எல்லாவற்றையும், காவார் ஆயினும்-காக்க மாட்டாராயினும், நா-நா (வொன்றையும்), காக்க-காக்கக் கடவர், காவாக்கால்-(அந் நாவினைக்) காக்க மாட்டா ராயின், சொல் இழுக்குப்பட்டு-சொற் குற்றத்தி லகப்பட்டு, சோகாப்பர்-(தாமே) துன்ப மடைவர். எ-று. 59

மூலம் 27 உய்து நெஞ்சமே.

**திருக் குறள் 30 (வாய்மை-8.)**

புறந்தூய்மை நீரான மையும கந்தூய்மை,
வாய்மையாற் காணப்ப டும். 60

(இ-ள்) புறம்-(ஒருவனுக்கு) உடம்பு, தூய்மை-பரிசுத்தமாந் தன்மை, நீரான்-நீரினாலே, அமையும்-உண்டாகும், அகம்-(அது போல) மநம், தூய்மை-பரிசுத்தமாந் தன்மை, வாய்மையால்-மெய் பேசுதலால், காணப்படும்-உண்டாகும். எ-று. 60

மூலம் 27 உய்து நெஞ்சமே.

**திருக் குறள் 30 (வாய்மை-2.)**

பொய்மையும் வாய்மையி டத்த-பு ரைதீர்ந்த
நன்மைப யக்குமெ னின். 61

(இ-ள்) பொய்மையும்-பொய்மை (ச் சொற்) களும், புரை தீர்ந்த-குற்றத்தினின்று நீங்கிய, நன்மை-நன்மையை, பயக்கும் எனின்-(பிறர்க்குத்) தரு

மாயின், வாய்மை இடத்த-மெய்மைச் சொற்களிடத்தனை வாம். எ-று. "பொய்ம்மையும்" என்ற உம்மை, எச்சப் பொருட்டு. 61

மூலம் 27 உய்து நெஞ்சமே.

### சிவ ஞாந தீபம்.

விரும்புற்ற தவம்விரதஞ் சீல மெல்லா
  மேல்வினைவென் றறிந்தெவையும் விமலன் கூத்தென்,
றிரும்புற்ற மநமழலின் மெழுகா யென்று
  மியான்செய்தேன் பிறர்செய்தா ரெனுங்கோ ணீக்கி,
யரும்புற்றங் கென்னதியா னென்னும் பாசத்
  தவாமருவும் புறப்பற்றோ டகப்பற் றுன,
பெரும்பற்றை யகன்றருளைப் பெறுவோர் ஞாநப்
  பெரும்பற்றப் புலியூரைப் பிரியார் தாமே. 62

(இ-ள்) விரும்பு உற்ற-(அதிகாரிகள்) விரும்பத்தக்க, தவம்-(கிருச்சிர சாந்தராயணுதி) தவமும், விரதம்-(சோம வாராதி) விரதங்களும், சீலம் எல்லாம்-ஒழுக்கங்கள் யாவும், மேல் வினைவு என்று-புநர் ஜெந்மத்திற்கு ஏது என்று, அறிந்து-உணர்ந்து, எவையும்-யாவும், விமலன்-பரமேசுரனது, கூத்து என்று-திருவிளையாடலென்று, இரும்பு உற்ற-இரும்புக்குச் சமாநமாய, மநம்-(கடிநமாக உள்ள) மநது, அழலின்-அக்நியிலிட்ட, மெழுகு ஆய்-மெழுகு போல (பக்தியினுல் உருகி), யான் செய்தேன்-(நற் காரியம்) என்னுல் செய்யப்பட்டது, என்றும்-என்றும், பிறர் செய்தார்-(தீக் காரியம்) பிறர் செய்தார்கள், எனும்-என்றும் உண்டாகின்ற, கோள் நீக்கி-குற்றங் களைந்து, அரும்பு உற்று-அடக்க முடையவனுக இருந்து, என்னது-என்னுடையது, யான் என்னும்-யான் என்று உண்டாகின்ற, பாசத்து-பந்தத்தினுல், அவா மருவும்-ஆசை யுண்டாகும், புறப் பற்றோடு-பாகிய பற்றுகிய தார புத்திர தநாதிகளிடத்தும், அகப் பற்று ஆன-உட்பற்றுகிய தேகேந்திரியங்களிடத்து முள்ள, பெரும் பற்றை-பெரிய பற்றுக்களை, அகன்று-விட்டு, அருளை-(பரசிவ) கிருபையைப், பெறுவோர்-அடைபவர்கள், ஞாந-ஞாந மாகிய, பெரும் பற்ற-பெருமை பொருந்திய பற்றை யுடைய, புலியூரை-திருப்பாப் புலி யூரை, பிரியார்-ஓர் பொழுதும் விட்டு நீங்கார்கள் (நிஷ்டையிலேயே யிருப்பர் என்றபடி) எ-று. அங்கு-தாம்-ஏ-அசை. 62



மூலம் 27 உய்து நெஞ்சமே.

### சிவாநுபூதி விளக்கம்.

விருப்பு வெறுப்பென்று வேறுபொருள் கோடலிறை, யுருப்பிற் குறையாதோ-உணர்வுடையோர் சொல்லுவரோ. 63

(இ-ள்) விருப்பு-ராகமும், வெறுப்பு-துவேஷமும், என்று-என, பொருள் வேறு-வஸ்துவைக் கூறுபடுத்தி, கோடல்-கொள்ளுதல், இறை-பரமேசுவரன், உறுப்பில்-அவயவங்களில், குறையாதோ-குறைவுபடாதோ, உணர்வு-ஞாநம், உடையோர்-உள்ளவர்கள், சொல்லுவரோ-(இப்படிச்) சொல்லு

வார்களா, (யாவும் பரமேசுவர சொரூப மாகலின் அப் பரமேசுவர ரூபத்தில் இராகத் துவேஷம் உண்டாக தென்ப தாம்). எ-று. 63

மூலம் 28 தேரி னிவ்வுடல்.

**தத்துவ ராயார்-அமிர்த சாரம். 111**

செவ்வே யுடலுஞ் சிரமுங் கழுத்துமுற,
வெவ்வாத நத்திலி ருந்தவர்க்குங்-கைவந்தால்,
வாத முதனோய் நலியா மதியுடையோ,
ராதந மென்பத து 64

(இ-ள்) உடலும்-சரீரமும், கழுத்தும்-கழுத்தும், சிரமும்-சிரசும், செவ்வே-நேரே (அசையாம லென்றபடி), உற-பொருந்தும்படியாய், எவ் ஆதநத்தில்-எப்படிப்பட்ட ஆசநத்தி லாவது, இருந்தவர்க்கும்-இருந்து அப்பியாசிப்பவர்களுக்கும், கைவந்தால்-(ஆதந மானது) கை கூடுமாயின், வாதம் முதல்-வாதம் முதலிய, நோய்-வியா தியினாலே, நலியா-துன்ப மடையமாட்டார்கள், மதி யுடையோர்-புத்திமான்கள், அது-அதனையே, ஆதநம்-ஆசநம், என்பது-என்று சொல்லுவ தாம். எ-று. "இருந்தவர்க்கும்" என்ற உம்மை. எச்சப் பொருட்டு. 64

மூலம் 28 தேரி னிவ்வுடல்.

**ஒழிவி லொடுக்கம்- (பொதுவில் உபதேசம் 15.)**

உடற்குயிர்போற் கட்கிமைபோல் ஊசிநூ லொத்து,



விடிற்புலிதீ பாம்பினில்வீழ் வார்க்காஞ்-சுடர்ச்சுடினும்,
வாழைக்கா காவேதி மட்கலத்துக் காகாவா,
றேழைக்கா காததி து. 65

(இ-ள்) உடற்கு-சரீரத்திற்கு, உயிர் போல்-பிராணன் (எப்படி முக்கியமோ அப்படிப்) போலவும், கட்கு-கண்ணிற்கு (யா தொரு தீங் குண்டாகாதிருக்க), இமை போல்-இமை (களானது எப்படி முக்கியமோ அது) போலவும், ஊசி நூல் ஒத்து-(ஊசி போகும் வழி) நூல் (எப்படிப் போகுமோ அது) போலவும், விடில்-(ஆசிரியர்) சொன்ன மாத்திரத்து, புலி-புலியைப் பிடி என்ற போதும், தீ-தீயில் குதி என்ற போதும், பாம்பினில்-பாம்பை பிடி என்றபோதும், வீழ்வார்க்கு ஆம்-(மறுதளிக்காமல்) செய்யும் பக்குவிகட்கே இந் நூல் பிரயோஜநமாம், சுடர் சுடினும்-அக்நி தகிக்கும் சுபாவ முடையதாயினும், வாழைக்கு ஆகா-வாழை மரத்தைத் தகிக்க ஆற்றலற்றன போலவும், வேதி-(பரிசந) வேதி, மண் கலத்துக்கு-மண் கலங்களை, ஆகா ஆறு-தன் னுருவ மாக்கா வாறு போலவும், இது ஏழைக்கு ஆகாது-இந் நூல் பக்குவ மல்லாதவர்க்கு உபயோக மாகாவாம். எ-று. "சுடினும்" என்ற உம்மை எச்சப் பொருட்டு. 65

மூலம் 28 தேரி னிவ்வுடல்.

**திருக் குறள் 32 (இன்னா செய்யாமை-5.)**

அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்,
தன்னோய்போற் போற்றாக் கடை. 66

(இ-ள்) பிறிதின்–வேறோர் உயிருக்கு (வரும்), நோய்–துன்பந் தருவனவற்றை, தன் நோய் போல்–தம் உயிருக்கு வந்த துன்பம் போல, பேற்றுக் கடை–காப்பாற்றுத விடத்து, அறிவினுன்–(துறந்தார்க்கு உயிர்முதலியவற்றை உள்ள வாறு அறிந்த) அறிவினுல், ஆகுவது–ஆகு மொரு பயன், உண்டோ-உளதோ (இல்லை) எ-று. 66

மூலம் 28 தேரி னிவ்வுடல்.

திரு வாசகம் (அதிசயப் பத்து 7.)

பொத்தை யூன்சுவர் புழுப்பொழுதிந் துளுத்தசும்
பொழுகிய பொய்க்கூரை,
யித்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற்
சுழித்தலைப் படுவேனை,
முத்து மாமணி மாணிக்க வைரத்த
பவளத்தின் முழுச்சோதி,
யத்த னுண்டுதன் னடியரிற் கூட்டிய
வதிசயங் கண்டாமே. 67

(இ-ள்) பொத்தை–(நவத் துவார மாகிய) பொத்த லா யுள்ள, ஊன் சுவர்–மாமிசத்தா லாக்கப்பட்ட சுவர், புழு பொதிந்து–புழுக்கள் நிறைந் துள்ள, உளுத்து–உளுத்து, அசும்பு ஒழுகிய–நிண நீர் வடிகின்ற, பொய் கூரை–பொய் யான கூரை வீட்டுக்குச் சமான மாம், இத்தை–இப்படிப்பட்ட சரீரத்தை, மெய் என–நிலை யுள்ளது என்று, கருதி நின்று–நம்பி இருந்து, இடர் கடல்–துன்ப மாகிய சமுத்திரத்தின், சுழித்தலை–சுழியில், படுவேனை–அகப்பட்டு வருந்துவேனை, முத்து–முத்து, மா மணி-பெரிய இரத்திநம், மாணிக்க–மாணிக்கம், வைரத்த–வைரம், பவளத்தின்-பவளம் (ஆகிய) இவைகட்கெல்லாம், முழுச் சோதி–பூரணப் பிரகாச மா யுடைய, அத்தன் ஆண்டு–பரமேசுவரன் (என்னை) அடிமை கொண்டு, தன் அடியரில்–தனது அடியா ரோடு, கூட்டிய–சேர்த்துக் கொண்ட, அதிசயம்–ஆச்சர்யத்தை, கண்டாம்-(யாம்) உணர்ந்தோம் (பார்த் தோம்) எ-று. ஏ–அசை. 67



மூலம் 29 செய்யு நந்தொழி.

அறி வாநந்த சித்தியார் 73.

அன்னம யங்கொண்டெ டுத்தவு டல்களு மாயிழையும்,
பின்னமு டன்வரு பிள்ளையுஞ் சுற்றமும் பேருலகின்,
மன்னுந ரைதிரை மூப்பினு நோயினு மாளக்கண்டுந்,
துன்னும றிவில ராந்மாவி துவென்று சொல்லுவரே. 68

(இ-ள்) அன்னமயம் கொண்டு–அந்நத்தைக் கொண்டு, எடுத்த–உண்டாகின்ற, உடல்களும்–சரீரங்களும், ஆயிழையும்–பெண் சாதியும், பின்ன முடன்–வெவ் வேருக, வரு–உண்டாகின்ற, பிள்ளையும்–பிள்ளைகளும், சுற்றமும்–சுற்றத்தாரும், பேர் உலகின்–பரந்த பூமியில், மன்னும்–இடை இடையே வரப்பட்ட, நரை–(மயிர்) நரைத்தலினுலும், திரை–(தோல்) சுருங்குதலினுலும், மூப்பினும்-வயோதிகத்தி

ஞலும், நோயினும்-வியாதியினுலும், மாள கண்டும்-இறக்கப் பார்த்தும், துன்னும்-பொருந்தாநின்ற, அறிவிலர்-அஞ்ஞாநிகள், இது-இந்த (அந்ந-மயத்தா லாகிய) சரீரத்தை, ஆந்மா-ஆத்மா, என்று-என, சொல்லுவர்-சொல்லுவார்கள். எ-று, ஏ-அசை. "உடல்களும், ஆயிழையும், பிள்ளேயும், சுற்றமும்" என்னும் உம்மைகள். எண்ணும்மை. 68

மூலம் 29 செய்யுநந் தொழி

அறி வாநந்த சித்தியார் 75.

ஊசுமு டலினு ழல்கின்ற காற்றையு ணர்வென்பரே,
யேசுமு றக்கத்தி யங்கியு மிங்கறி வேதுமற்று,
வீசும்பி ராணனே யாந்மாவ லவென்று வேதஞ்சொல்லும்,
பேசும நிதர்பொ ருளறி யாமற்பி தற்றுவரே. 69

(இ-ள்) ஊசும்-(முடை) நாற்றமுடைய, உடலின்-சரீரத்தின்கண், உழல்கின்ற-(வெளியிலும் உள்ளிலு மாகப்) போய் வருகின்ற, காற்றை-(பிராண) வாயுவை, உணர்வு-ஆந்மா, என்பர்-என்று (பிராணுத்ம வாதிகள்) கூறுகின்ருர்கள், ஏசும்-(யாவராலும்) நிந்திக்கப்படுகின்ற, உறக்கத்து-சுழுத்தியவஸ்தையில், இயங்கியும்-சென்று கொண்டிருந்தும், ஏதும்-யாதொரு விதமான, அறிவு-ஞாநமும், இங்கு-இந்த சுழுத்தியவஸ்தையில், அற்று-இல்லா திருத்தலிஞலும், வீசும்-(கொல்லன் துருத்தி போல்) உசுவாச நிசுவாசம் செய்கின்ற, பிராணனே-பிராண வாயுவை,



ஆந்மா அல-ஆத்மா அன்று, என்று-என, வேதம் சொலும்-வேதங்கள் சொல்லுகின்றன, பேசும் மநிதர்-(பல வித மாகப்) பேசுகின்ற மநுடர், பொருள் அறியாமல்-வஸ்துவை உணராமல், பிதற்றுவர்-(பிராணனே ஆத்மா என்று) பிதற்றுகின்ருர்கள். எ-று. ஏ-ஏ-அசை. 69

மூலம் 29 செய்யு நந்தொழி.

அறி வாநந்த சித்தியார் 77.

தனக்கும நதுச லித்ததென் றேசொல்லித் தானிருந்து,
முனக்குவி சாரமுண் டாயிற்சொல் லென்றிங்கு வந்துநின்று, [வேழைகடா,
மெனக்கிங்க றியவொண் ணுதென்று சொல்கின்ற
நினைக்கத் தனக்கறி வில்லாம நத்தைநி லேயென்பதே. 70

(இ-ள்) தனக்கு-தனக்கு, மநது-மநமானது, சலித்தது-சலநமடைகின்றது, என்று சொல்லி-என்றுரைத்து, தான் இருந்தும்-தான் இந்த படியே இருந்தும், உனக்கு-உனக்கு, விசாரம் உண்டாயில்-விசாரமிருக்குமாயின், சொல் என்று-சொல்லுவாயாக வென்று, உவந்து நின்றும்-சந்தோஷமாக விருந்தும், எனக்கு-எனக்கு, அறிய வொண்ணுது-(நீ சொல்வது ஒன்றும்) உணர முடியவில்லே, என்று-என, சொல்லுகின்ற-சொல்லப்படுகின்ற, ஏழைகள்-மநாத்ம வாதிகள், நினைக்க-தான் ஸ்வயமாக ஸ்மரிக்க, தனக்கு-தனக்கு, அறிவு இல்லா-ஞாநமில்லாத, மநத்தை-மநத்தை, நிலே என்பது-ஸ்திரமான ஆந்மா வென்று

சொல்லுகின்றார்கள். எ-று. இங்கு—தாம்—இங்கு-ஏ—ஏ—அசை. 70

மூலம் 29 செய்யு நந்தொழி.

அறி வாநந்த சித்தியார் 79.

இணங்கு நவகுண மெய்துமிப் புத்தியை யின்றுபுத்தர்,
வணங்கும் விஞ்ஞாந மயம்பொரு ளென்ற
மதியின்மைபோற்,
பிணங்கு நிலைவிட்டுக் கேளாய் மறையின்று பிந்நமறக்,
குணங்குறி யின்றியி ருக்குமாந் மாவென்று கூறிடுமே. 71

(இ-ள்) இணங்கும்—(மநதோடு) சேர்ந்துள்ள, நவ குணம்-ஒன்பது விதமான குணங்களை, எய்தும்—அடைகின்ற (ஜடரூப மான), இப் புத்தியை—இந்தப் புத்தியினை, இன்று—இப் பொழுது, புத்தர்—பௌத்த மதஸத்தர், வணங்கும்—போற்றப்படுகின்ற, விஞ்ஞாந மயம்—விஞ்ஞாந மய கோசத்தை, பொருள் என்ற—ஆத்மா வென்று சொல்லுகின்ற, மதியின்மை போல்—மூட புத்தியைப் போல், பிணங்கும் நிலை—பிணங்குகின்ற தன்மையை, விட்டு—ஒழித்து, கேளாய்-கேட்பாயாக, மறை—வேதம், இன்று—இப்பொழுது, பிந்நம் அற-பரிச்சிந்நம் இல்லாமல், குணம்—(யாதொருவிதமான) குணமில்லாமல், குறி இன்றி—அடையாள மில்லாமல், ஆந்மா—ஆத்மா, இருக்கும்—இருக்கின்றது, என்று—என, கூறிடும்-சொல்லுகின்றது. எ—று. ஏ—அசை. 71

மூலம் 29 செய்யு நந்தொழி.



அறி வாநந்த சித்தியார் 81.

சேருஞ் சுகம்பொரு ளென்றனை துக்கஞ்செ றியும்பொழு,
தாருஞ் சுகதுக்கி யாகி யிடுநிலை யன்றிமறை,
தேரு நிரதிச யாநந்த மேசிதை வற்றபொருள்,
கூறு நிலையை யறியா ரழிசுகங் கொள்ளுவரே. 72

(இ-ள்) சேரும்-(கருமாதீனமாகப்) பொருந்துகின்ற, சுகம்-ஆநந்தமய கோசத்தை, பொருள்—ஆந்மா, என்றனை—என்று கூறினுய், துக்கம்—துக்கமானது, செறியும் பொழுது—உண்டாகின்ற காலத்து, ஆரும்—யாரொருவரும், சுக துக்கி ஆகியிடும்—சுக துக்கிகளாக ஆகும், நிலை—இத் தன்மை, அன்றி—அல்லாமல், மறை—வேதங்களான், தேரும்—நிச்சயிக்கப்பட்ட, நிரதிசய ஆநந்தமே—அழிவற்றதா யுள்ள ஆநந்தமே, சிதைவு—நாசம், அற்ற—இன்றிய. பொருள்—ஆந்மாவாகும், கூறும்—(இந்தப் பிரகாரம் வேதங்களால்) நிச்சயிக்கப்பட்ட, நிலையை—தன்மையை, அறியார்—உணராதவர்கள், அழி சுகம்—தோன்றி மறைகின்ற ஆநந்தமய கோசத்தை, கொள்ளுவர்—(ஆந்மா வென்று) சொல்லுவார்கள். எ—று. ஏ-அசை. 72

மூலம் 30 தெளிவு யிர்க்கான்.

திரு வாசகம் (குழைந்த பத்து. 8)

நாயிற் கடையா நாயேனை நயந்து நீயே யாட்கொண்டாய்,
மாயப் பிறவி யுன்வசமே வைத்திட் டிருக்கு மதுவன்றி,
யாயக் கடவே ஞனேதா னென்ன தோவிங் கதிகாரங்,

காயத் திடுவா யுன்னுடைய கழற்கீழ் வைப்பாய்
கண்ணுதலே. 73

(இ-ள்) கண்ணுதலே-நெற்றிக் கண்ணை யுடைய பரசிவனே, நாயில் கடை ஆம்-நாயினும் கடையே னாகிய, நாயேனை-அடியவனை, நீயே-தேவரீரே, நயந்து-விருப் புற்று, ஆள் கொண்டாய்-அடிமை கொண்டாய், மாயப் பிறவி-தோன்றித் தோன்றி மறைகின்ற, இப் பிறவியை, உன் வசமே-தேவரீ ரிடத்தே, வைத்திட் டிருக்கும்-வைத் திருக்கின்றனை, அது அன்றி-அது அல்லாமல், நானோ-அடியேனோ, ஆயக் கடவேன்-(அதை) விசாரிக்கச் சமர்த்தன்?, இங்கு-இவ்விடத்து, அதிகாரம்-அதை வைத்திருக்கும் வல்லமை, என்னதோ-என்னுடையதா? (இல்லை), காயத் திடுவாய்-(வேறொரு) சரீரத்திற் சேர்த்தாலும் சேர்ப்பீர் (அல்லது), உன்னுடைய-தேவரீரது, கழல் கீழ்-திரு வடியின் கீழ் (சேர்த்தாலும்), வைப்பாய்-சேர்த்துக் கொள்ளுவீர். தான்-அசை. 73

மூலம் 31 மறைத்த லுந்நினை.

கந்த ரலங்காரம். 74.

அராப்புனை வேணியன் சேயருள் வேண்டும விழ்ந்த வன்பாற்,
குராப்புனை தண்டையந் தாடொழல் வேண்டுங் கொடிய [வைவர்,
பராக்கறல் வேண்டு மநமும் பதைப்பறல் வேண்டு மென்றா,
விராப்பக லற்றவி டத்தேயி ருக்கையெ ளிதல்லவே. 74



(இ-ள்) அரா புனை-சர்ப்பத்தை (ஆபரண மாக) அணிந்துள்ள, வேணியன்-கங்கையை சடாபாரத்தி லுடைய பரமேசுவரனது, சேய்-குழந்தை யாகிய சுப்பிர மணியக் கடவுளின், அருள்-கிருபை, வேண்டும்-(பூரண மாக) இருக்கவேணும், அவிழ்ந்த-முதிர்ந்த, அன்பால்-பக்தியினால், குரா புனை-குராப் பூமாலையைத் தரித்துள்ள, தண்டை-சிலம்பை யுடைய, அம் தாள்-அழகிய திரு வடிகளை, தொழல் வேண்டும்-வணங்க வேண்டும், கொடிய-கொடிய பகைவ ராகிய, ஐவர்-பஞ்சேந்திரியங்களும், பராக்கு-(விஷயங்களிற் செல்லும்) வெளிப் பார்வையையும், அறல் வேண்டும்-(அத்தியந்தம்) ஒழிக்க வேண்டும்? மநமும்-மநதும், பதைப்பு-சலநத் தன்மையை, அறல் வேண்டும்-ஒழிக்க வேண்டும், என்றால்-என்று சொல்லப்படுமானால், இரா பகல் அற்ற-இரவு பகல் அற்ற, இடத்து-இடத்தில் (நிர்விகல்ப சமாதியில்), இருக்கை-இருப்பது, எளிது அல்ல-சுலபம் அல்ல (கஷ்ட மாம் என்றபடி) எ-று. ஏ-ஏ-அசை. "மநமும்" என்ற உம்மை முற்றும்மை. 74

மூலம் 31 மறைத்த லுந்நினை.

திருவாசகம். (அண்டப் பகுதி. 42)

பத்தி வலையிற் படுவோன் காண்க. 75

(இ-ள்) பத்தி-பக்தியாகிய, வலையில்-வலையினிடத்தில், படுவோன்-அகப்படு(வன் பரமசி) வன், காண்க-(என) அறிக. எ-று. 75

மூலம் 31 மறைத்த லுந்நினே.

திரு வம்மாஊ.

தற்போத மற்றிடந் தற்பர மம்மானை 76

(இ-ள்) தன்-தனது. போதம்-அகங்கார ஞானம் (திரிபுடி), அற்றிடம்-ஒழிந்த விடம், தத் பரம்-தனது சிவ சொருப மாம், அம்மானை-அம்மானை. எ-று. 76

மூலம் 32 ஒன்று நஞ்செய

குறுந் திரட்டு.

தானலா தொன்று தன்னைத் தானெனக் கருதிக் கொண்டே,
யானெலாஞ் செய்தே னென்னு ஞாநமஞ் ஞாந மத்தா,
லீனமாம் வினையி ரண்டா மிருவினை யாலு டம்பா,
மூனமா முடம்பா லூழா மூழினு லாகா துண்டோ. 77

(இ-ள்) தான் அலாத-தன்னுடைய தல்லாத, ஒன்று தன்னை-திருசிய ரூப அஞ்ஞாநத்தை, தான் என-தனது என்று, கருதிக் கொண்டு-நினைத்துக் கொண்டு, யான்-நான், எலாம்-எல்லாவற்றையும், செய்தேன்-இயற்றினேன், என்னும்-என்று உண்டாகின்ற, ஞாநம்-ஞானமானது, அஞ்ஞாநம்-அஞ்ஞாந மாம், அத்தால்-அவ்வித அஞ்ஞாநத்தால், ஈனம் ஆம்-இழி வாகிய, வினை-கன்மம் (புண்ணியம் பாவம் என்று), இரண்டு ஆம்-இரண்டு வித மாம். இரு வினையால்-புண்ணிய பாவங்களால், உடம்பு ஆம்-(தக்கபடி) சரீர மாம், ஊனம் ஆம்-நாசத்திற்கு ஏதுவான, உடம்பால்-சரீரத்தால், ஊழ் ஆம்-வினைகள் உண்டாம், ஊழினால்-கன்மங்களால், ஆகாது-உண்டாகத் தகாதவை, உண்டோ-என்ன இருக்கிறது (எல்லாம் ஆம் என்றபடி) எ-று. தன்-ஏ-அசை. 77



மூலம் 33 இணையின் ஞாநபூ.

சிவ போக சாரம் 98

அமைத்த வினைக்கீடா வநுதிநமுஞ் செய்வ,
திமைப்பொழுதும் வீன்செயலொன் றில்லை-யுமைக்குரியா
னெல்லாம றிந்தேயி யற்றுவது தன்னடிமை,
வல்லார்த மக்குணர்த்து வான். 78

(இ-ள்) உமைக்கு-உமாதேவிக்கு, உரியான்-பதியாகிய பரமசிவன், அமைத்த-(ஜீவர்களால்) செய்யப்பட்ட, வினைக்கு-புண்ணிய பாவத்திற்கு, ஈடா-தக்கபடி, அநுதிநமும்-நாடோறும் (கர்மங்கள்), செய்வது-செய்வதாம். இமைப் பொழுதும்-க்ஷண நேரமும், வீண் செயல்-வீணான கன்மம், ஒன்றும் இல்லை-யாதொன்றும் இல்லையாம், எல்லாம்-யாவற்றையும், அறிந்து-(சர்வக்ஞத்தன்மையால்) உணர்ந்து, இயற்றுவது-செய்விப்பதை, தன் அடிமை-தனது அடிமையாகிய, வல்லார்தமக்கு-சாதுக்களுக்கு, உணர்த்துவான்-அறிவிப்பான். எ-று. ஏ-"வல்லார் தமக்கு,, என்பதில், தம்-அசை. 78

மூலம் 33 இணையின் ஞாநபூ.

சுந்தர மூர்த்திசுவாமிகள் தேவாரம் (ஊர்த் தொகை) 7.

தேனைக் காவல் கொண்டு விண்ட கொன்றைச்
செழுந்தாராய்.
வானைக் காவல் கொண்டு நின்ரு ரறியா நெறியானே,
யானைக் காவி லரனே பரனே யண்ணு மலையானே,
யூனைக் காவல் கைவிட் டுன்னை யுவப்பா ருணர்வாரே. 79

(இ-ள்) தேனை காவல் கொண்டு-தேன் நிரைந்து, விண்ட-விரிந்த, கொன்றை-கொன்றைப் புஷ்பத்தின், செழும்-செழுமை பொருந்திய, தாராய்-மாலையை யணிந்தவனே, வானை-தேவ லோகத்தை. காவல் கொண்டு-காவ லாகக் கொண்டு, நின்ருர்-இருக்கப் பட்ட தேவர், அறியா-காணமுடியாத, நெறியானே-தன்மையை யுடையவனே, ஆனைக் காவில்-திருவானைக் கா வென்னும் க்ஷேத்திரத்தில், அரனே-(எழுந்தருளியிருக்கப்பட்ட) கடவுளே, பரனே-மேலானவனே, அண்ணுமலையானே-திரு வண்ணுமலையில் வீற்றிருப்பவனே, ஊனை-மாம்ச மய மான சரீரத்தில் உள்ள, காவல்-அபிமாநத்தை. கைவிட்டு-அத்தியந்தம் ஒழித்து, உவப்பார்-சந்தோஷித் திருப்பவர்கள், உன்னை-தேவரீரை, உணர்வார்-அறிவார்கள். எ-று. ஏ-அசை.
79

மூலம் 34 என்றும் விடடைந்.

திரு நாவுக் கரசர் தேவாரம் (அங்க மாலை) 11.



இறுமாந் திருப்பன் கொலோ வீசன் பல்கணத்
தெண்ணப்பட்டுச், சிறுமா னேந்திதன் சேவடிக்
கீழ்ச் சென்றங் கிறுமாந் திருப்பன் கொலோ. 80

(இ-ள்) ஈசன்-பரமேசுவரனது, பல் கணத்து-அநேக கணக் கூட்டங்களோடு, எண்ணப்பட்டு-(யானும் ஒருவ னுகக்) கருதப்பட்டு, இறுமாந்து-ஏமாப்புற்று, இருப்பன் கொலோ-(என்று) இருப்பேனே, சிறு மான்-சிறிய மானை, ஏந்தி தன்-(இடது கரத்தே) வைத்துள்ள பரமசிவ னுடைய, சே அடிக்கீழ்-திரு வடியின் கீழே, சென்று-போய், அங்கு-அவ்விடத்து, இறுமாந்து-சந்தோஷித்து, இருப்பன் கொலோ-இருப்பேனே. எ-று. கொல் கொல் அசை.
80

மூலம் 34 என்றும் வீடைந்.

திருக் குறள் 35 (துறவு-5.)

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்ருர்க்-குடம்புமி கை. 81

(இ-ள்) பிறப்பு-பிறவியை, அறுக்கல்-நீக்க, உற்ருர்க்கு-(முயற்சி) மேற்கொண்டவருக்கு, உடம்பும்-(அப் பிறப்பை நீக்குதற்கு உதவி யாகிய) உடம்பும், மிகை-அதிகமாம் (ஆன பின்), மற்றும்-அதற்கு மேலே, தொடர்பாடு-சம்பந்த முடையன வாதல், எவன்-என்னுகும். எ-று. 81

மூலம் 35 வீடு கூட்டுவான்.

### திரு நாவுக் கரசர் தேவராம் (கடம்பூர்)9.

நன்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்,
றென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்,
றன்க டன்னடி யேனையுந் தாங்குத
லென்க டன்பணி செய்துகி டப்பதே. 82

(இ-ள்) நன்–நல்ல வாசனை பரிமளியாநின்ற, கடம்பனை–கடப்ப மாலை யணிந்த சுப்பிரமணியக் கடவுளை, பெற்றவள்–ஈன்றவ ளாகிய உமாமகேசுவரியை, பங்கினன்-(இடது) பாகத்தி லுடையவனும், தென் கடம்பை–தென் கடம்பை யென்னும் க்ஷேத்திரத்தில், திரு கரக் கோயிலான்–திருக் கரத்தைக் கோயிலாகக் கொண்டவனு மாகிய கடவுளினது, கடன்–கடமை, அடியேனையும்–அடியேனை, தாங்குதல்–இரக்ஷித்தலாம், என் கடன்–என் னுடைய கடமை, பணி–(தேவரீருக்கு) பணிவிடை, செய்து கிடப்பதே–செய்து கொண்டிருப்பதே யாம். எ–று, தன்–அசை. "அடியேனையும்" என்ற உம்மை சிறப் பும்மை. 82

மூலம் 36 இருப்பை நாடொறு

### பொன் வண்ணத் தந்தாதி 64.

தொடங்கிய வாழ்க்கையை வாளாது றப்பர்து றந்தவரே,
யடங்கிய வேட்கைய ரன்பா லிலரறு காற்பரவை,
முடங்கிய செஞ்சடை முக்கண ணுர்க்கன்றி யிங்குமன்றிக்,
கிடங்கினுட் பட்டகரா வனை யார்பல கேவலரே. 83



(இ-ள்) பல கேவலர்–பல அறிவிலிகள், தொடங்கிய–(தாம்) மேற் கொண்ட, வாழ்க்கையை–இல்லற ஆசிரமத்தை, வாளா துறப்பர்–வீணுக (விட்டு) துறவற மடைகின்ருர்கள், அன்பால்–(பரமசிவனிடத்து) அன்பு காரண மாக, துறந்தவர்–(யான் எனது என்னும் செருக்கை) விட்டவர், அடங்கிய வேட்கையர்–விருப்பம் ஒழிந்தவர் ஆவர், இலர்-(அதனுல் சம்சார பந்தம்) இல்லாதவர் ஆவர், அறு கால் பறவை–வண்டுகள் (தேனை யுண்ண), முடங்கிய–மொய்க்கப்பட்ட, செம் சடை–சிறந்த ஜடாபாரத்தை யுடைய, முக்கணணுர்க்கு–திரிநேத்திரங்களை யுடைய பரமசிவனிடத்தும், அன்றி–அல்லாமல், இங்கும் அன்றி–முன் னிருந்த கிரஹஸ்தாச்சிரமு மல்லாமல், கிடங்கினுள் பட்ட–பள்ளத்தினுள் கிடந்து (சமுத்திரம் போயச்சேர நினைந்து மத்தியில்) அகப்பட்ட, கரா அனையார்–முதலையைப் போன்றவர்க ளாயினர். ஏ-ஏ–அசை. எ–று. 83

மூலம் 37 ஆமை யாருறுப்.

### திரு வருட் பயன் (அணைந்தோர் தன்மை) 94.

புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவார் போதார்,
தலநடக்கு மாமைத க. 84

(இ-ள்) தலம்-பூமியில், நடக்கும்–செல்லுகின்ற, ஆமை தக–ஆமையானது (தனக்கு ஒருவரால் தீமை வந்த விடத்து எப்படி தன் அவயவங்களை வெளிப்படுத்

தாது இருக்குமோ அது) போல, புலன்–இந்திரியங்களை, அடக்கி–(பஞ்ச விஷயங்களில் செல்லாது) தடுத்து, தம் முதற்கண்–தமது சொரு பமாகிய ஆன்மாவிடத்து, புக்குறுவார்–லயித்திருப்பவர்கள், போதார்–(ஒரு விஷயத்தையும்) பொருந்த நினையார், எ–று. 84

மூலம் 37 ஆமை யாருறுப்.

(அருணகிரி யந்தாதி குகை நமச்சிவாயர்) 58.

பரகதிக்கு வித்தாமுன் பஞ்சாக்க ரத்தைப்,
பரபரப்ப வெண்ணுத பாவம்–நரகப்,
பிறப்பிற்கு மீடாப்பி றந்தருணை யீசா,
விறப்பிற்கு மீடாயி னேன். 85

(இ–ள்) அருணை ஈசா–அருணுசலத்தி லெழுந்தருளி யுள்ள ஈசுரனே, பரகதிக்கு–மேலான மோக்ஷத்திற்கு, வித்து ஆம்–விதையா யுள்ள, உன்–தேவரீரது, பஞ்ச அக்கரத்தை–ஐந்து அக்ஷரத்தை, பரபரப்ப–அதி விரைவாக, எண்ணுத–ஜெபிக்காத, பாவம்–பாபமானது, நரகத்திற்கு ஏதுவான, பிறப்பிற்கும்–ஜநநத்துக்கும், ஈடா–காரண மாக, பிறந்து–ஜநித்து, இறப்பிற்கும்–மரணத்திற்கும், ஈடு ஆயினேன்–ஏதுவானேன். எ-று. 85

மூலம் 38 தாயு மாகியென்.

தந்துவ ராயர் பாடு துறை.

தந்தைதா யாவானுஞ் சார்கதியிங் காவானு,



மந்தமிலா வின்பநமக் காவானு–மெந்தமுயிர்,
தானகு வானுஞ் சரணகு வானுமருட்,
கோனகு வானுங்கு ரு. 86

(இ–ள்) தந்தை–பிதா, தாய்-மாதா, ஆவானும்–ஆகுபவனும், சார்–அடையத் தக்க, கதி–மோக்ஷம், இங்கு–இவ்விடத்து, ஆவானும்–ஆகுபவனும், நமக்கு–நமக்கு, அந்தம் இலா–நாசம் இல்லாத, இன்பம்–ஆநந்தம், ஆவானும்–ஆகுபவனும், எம்–என்னுடைய, உயிர்–ஜீவரூபம், ஆகுவானும்–ஆகுபவனும், சரண்–(அடையத் தக்க) திரு வடி, ஆகுவானும்–ஆகின்றவனும், அருள்–கிருபையினை யுடைய, கோன்–தலைவன், ஆகுவானும்–ஆகுபவனும், குரு–குருமூர்த்தியே யாகும். எ–று. தம்–தான்–சாரியைகள் உம்மைகள் அனைத்தும் எண்ணுப் பொருளன, குரு என்னும் எழுவாய்க்கு. ஆகும் என்னும் பயனிலை அவாய் நிலையால் வருவிக்கப்பட்டது. 86

மூலம் 38 தாயு மாகியென்.

திரு வாசகம் (ஆத்ம சுத்தி 1.)

ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற்
கன்பிலை யென்புருகிப்,
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்,
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை
துணையிலி பிணநெஞ்சே,
தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை
செய்வதொன் றறியேனே. 87

[இப் பாட்டின் உரை 29வது பாட்டிற்காண்க.]

மூலம் 39 ஏனை நூல்பல.

(அருண கிரி நாதர் கந்த ரநுபூதி) 26.

ஆதா ரமிலே னருளைப் பெறவே,
நீதா னொருசற் றுநினைந் திலையே,
வேதா கமஞா நவிநோ தமநோ,
தீதா சுரலோ கசிகா மணியே. 88

(இ-ள்) வேத ஆகம-வேத ஆகம, ஞாந விநோத-ஞாந விநோதனே, மநோ அதீதா-மநத்தினால் கோசரிக்க முடியாதவனே, சுர லோக-தேவ லோகத்திற்கு, சிகா மணியே-சிரோ ரத்நம் போன்றவனே, அருளை-(தேவரீரது) கிருபையை, பெற-அடைவதற்கு, ஆதாரம்-(ஒரு) ஆதரவும், இலேன்-இல்லாதவனாயிருக்கின்றேன், நீ-தேவரீராவது, ஒரு சற்றும்-கொஞ்சமும், நினைந்திலையே-(என்னைக்) கவனிக்கவில்லையே. எ-று. தான் அசை. 88

மூலம் 39 ஏனை நூல்பல.

திருக் குறள் 1 (கடவுள் வாழ்த்து) 10.

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா,
ரிறைவனடி சேரா தார். 89

(இ-ள்) இறைவன்-தலைவனது, அடி-பாதமாகிய (மரக் கலத்தை சேர்ந்தால், பிறவி-பிறவியாகிய, பெரும் கடல்-பெரிய சமுத்திரத்தை, நீந்துவர்-கடப்பார், சேராதார்-(அம் மரக்கலத்தைச்) சேராதவர், நீந்தார்-கடக்கமாட்டாதவராகி அக் கடலுள் அழுந்தாநிற்பர். எ-று. 89



மூலம் 40 சதுர் மறைப்பொரு.

திரு வாசகம் (திருச் சதகம் 1.)

மெய்தா னரும்பி விதிர்விதிர்த் துன்விரை யார்கழற்கென்,
கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பிவெ தும்பி
யுள்ளம், [போற்றியென்னும்,
பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றி சயசய
கைதா னெகிழவி டேனுடை யாயென்னைக் கண்டு
கொள்ளே. 90

(இ-ள்) மெய்-சரீரமானது, அரும்பி-மயிர்க்குச்செறிந்து, விதிர் விதிர்த்து-நடுக்கமுற்று, உன்-தேவரீரது, விரை ஆர்-வாசனை பொருந்திய, கழற்கு-திருவடிக்கு, என்-எனது, கை-(இரு) கரங்களை, தலை வைத்து-சிரசின்மீது கூப்பி, கண்ணீர் ததும்பி-கண்ணீருகுத்து, உள்ளம்-மநம், வெதும்பி-நொந்து, பொய் தவிர்ந்து-பொய் யொழித்து, உன்னை-தேவரீரை, போற்றி-துதித்து, சய சய-சய முண்டாகுக, சய முண்டாகுக, போற்றி-(என்று) வாழ்த்தி, என்னும்-என்னும், கை நெகிழ விடேன்-கையை நழுவ விடேன், உடையாய்-உடையவரே, என்னை-அடியேனை, கண்டு கொள்ளே-பார்த்துக் கொள்வீராக. எ-று. தான்-தான்-தான், அசை. 90

மூலம் 41 ஆல நிழலி.

திரு வாசகம் (திருச் சதகம் 20.)

வாழ்கின்ருய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்,
டாழ்கின்ரு யாழாமற் காப்பானை யேத்தாதே,
சூழ்கின்ருய் கேடுனக்குச் சொல்கின்றேன் பல்காலும்,
வீழ்கின்ருய் நீயவலக் கடலாய வெள்ளத்தே. 91

(இ-ள்) வாழாத-ஒருமைப்பட்டிராத, நெஞ்சமே-மநமே, வாழ்கின்ருய்-(நீ விவேக மாகிய என்னேடு கூடி) வாழ்கின்றனை, வல் வினை-வலிமை பொருந்திய கன்மங்களை, பட்டு-பொருந்தி, ஆழ்கின்ருய்-மூழ்குகின்றனை, ஆழாமல்-(கன்மங்களில் அகப்பட்டு) மூழ்காமல், காப்பானை-(உன்னை) ரக்ஷிப்பவனை, எத்தாது-துதியாமல், உனக்கு-உனக்கு, கேடு-துன்பத்தினை, சூழ்கின்ருய்-விரும்புகின்றனை, நீ அவல-நீ அவலமாகிய, கடல் ஆய-சமுத்திர மாகிற, வெள்ளத்து-வெள்ளத்தில், வீழ்கின்ருய்-வீழ்கின்றனை, பல்காலும்-(இதைப்) பல தடவையும், சொல்கின்றேன்-சொல்லிவருகின்றேன். எ-று. ஏ-ஏ-அசை. 91

மூலம் 41 ஆல நிழலி.

### சிவாநந்த மாலை.

வீடொழியப் பேறில்லை யென்றென்றும் வேதங்க,
ணுடியறை யும்பொருளை ஞாநகுரு-நீடுமருட்,
கண்ணுலே சொன்ன கருணைப்பி ரான்றனை நா,
னெண்ணுதே யுண்டிருப்ப தென். 92

(இ-ள்) வீடு ஒழிய-(மோக்ஷ) வீடன்றி, பேறில்லை-(வேறு) பிரயோஜந மில்லை. என்று-என, என்றும்-சதா காலமும், வேதங்கள்-வேதங்களானது, நாடி-கருதி, அறையும்-சொல்லுகின்ற, பொருளை-வஸ்துவை, ஞாந குரு-ஞாநாசாரியார், நீடும்-மிகுந்த, அருள் கண்ணுலே-கிருபா வீக்ஷணத்தாலே, சொன்ன-உணர்த்திய, கருணைப் பிரான்றனை-கருணையை யுடைய பரமசிவனை, எண்ணுது-நினையாமல், நான்-நான், உண்டு-(வீணே) புசித்து, இருப்பது-இருப்பது, என்-யாது காரணம். எ-று. ஏ-அசை. "பிரான் றனை" என்பதில், தன் அசை. 92



மூலம் 42 என்னை கண்டுநீ.

### நாலடியார் (துறவறவியல்) 46.

குடருங் கொழுவுங் குருதியு மென்புந்,
தொடரு நரம்பொடு தோலு-மிடையிடையே,
வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்று
ளெத்திறத்தா ளீர்ங்கோதை யாள். 93

(இ-ள்) குடரும்-குடலும், கொழுவும்-கொழுப்பும், குருதியும்-இரத்தமும், என்பும்-எலும்பும், தொடரும்-(ஒன்றோடொன்று) சம்பந்தமா யுள்ள, நரம்பொடு-நரம்புடனே, தோலும்-தோலும், இடை இடையே-மத்தியில் மத்தியில், வைத்த-வைக்கப்பட்டுள்ள, தடியும்-இறைச்சியும், வழும்பும் ஆம்-நிணமும் ஆகிய, இவற்றுள்-இவைகட்குள்ளே, ஈர்ங் கோதையாள்-குளிர்ந்த பூ மாலை யுடைய பெண், எத் திறத்தாள்-எத் தன்மை யுடையவள். எ-று. மற்று-அசை. 93

மூலம் 43 பெறுவ தென்னே.

திரு நாவுக் கரசர் தேவாரம் (திருப் பத்தூர்)
(அரிசில் கரைப் புத்தூர். 5)

அருப்புப் போன்முலை யாரல்லல் வாழ்க்கைமேல்.
விருப்புச் சேர்நிலை விட்டுநல் லிட்டமாய்த்,
திருப்புத் தூரனைச் சிந்தைசெ யச்செயக்,
கருப்புச் சாற்றினு மண்ணிக்குங் காண்மினே. 94

(இ-ள்) அருப்பு போல்-கோங் கரும்பு போன்ற, முலையார்-முலைகளை யுடைய பெண்களது, அல்லல்-துக்கத்திற்கு ஏது வான, வாழ்க்கை மேல்-வாழ்க்கை யின் மீது, விருப்புச் சேர்-விருப்பம் பொருந்திய, நிலை விட்டு-தன்மையை யொழித்து, நல் இட்டம் ஆய்-மெய்யன் போடு, திருப் புத்தூ ரனை-திருப் புத்தூ ரென்னும் க்ஷேத்திரத்தி லெழுந்தருளியுள்ள ஈசுரனை, சிந்தை-மநதில், செய செய-தியாநிக்கத் தியாநிக்க, கருப்புச் சாற்றினும்-கரும்பு ரசத்தைக் காட்டிலும், அண்ணிக்கும்-இனிக்கும் (சுவைமிகும்), காண்மின்-அறியுங்கள். எ-று. ஓ-அசை. 94

மூலம் 44 ஆதரி த்தனே.

சிவாநந்த மாலை.

நல்ல வறுசுவைதான் நாக்கினுநி மாத்திரமே,
யெல்லை யிருவிரலே யல்லதிலை-மெல்ல,
விருவிரலைத் தான்கடக்க மாட்டாதே நெஞ்சே,
பொருகடலைத் தான்கடப்பாய் போய். 95



(இ-ள்) நல்ல அறு சுவை-நல்ல அறு சுவையின் ருசியும், நுதி நாக்கின் மாத்திரம்-நுதி நாவில் தான், எல்லை-(அதன்) அளவு, இரு விரலே-இரண் டங்குல மாத்திரந் தான், அல்லது இலை-அல்லாமல் வே றில்லை, மெல்ல-பையப் பைய, இரு விரலை-இரண் டங்குல அளவை, கடக்கமாட்டாதே-தாண்டமுடியாத, நெஞ்சே-(ஏ) மநமே, போய்-(நீ) சென்று, பொரு-(ஜநந மரண மாகிய அலைகள்) பொருதுகின்ற, கடலை-சமுத்திரத்தை, கடப்பாய்-தாண்டப் போகின்றனை. எ-று. தான்-ஏ-தான்-தான்-அசை. 95

மூலம் 45 நினைப்பி னுங்குறி.

சிவாநந்த மாலை.

ஊனுமு ரையுநமன் றூதுவர்கா னுள்ளமே,
வாணுதலார் நேரே மறலிகாண்-பேணியிவ,
ருற்றூர்போல் வந்திடுவர் வந்தாலு மோட்டியர,
னற்றும ரைப்பதமே நாடு. 96

(இ-ள்) உள்ளமே-(ஏ) மநமே, ஊனும்-அருந் தலும், உரையும்-வசநமும், நமன்-யமனால் விடப் பட்ட, தூதுவர்-தூத ராவர், வாள் நுதலார்-பிரகாசம் பொருந்திய நெற்றியை யுடைய பெண்கள், நேரே-நேரே, மறலி-யமன் ஆவர், இவர்-இப் பெண்கள், பேணி-விருப் புற்று, உற்றூர் போல்-சுற்றத்தவரைப் போல, வந்திடுவர்-வருவார்கள், வந்தாலும்-(அவர்கள் அவ் வாறு) வரும் பொழுதும், ஓட்டி-(தடுத்து) விரட்டி,

அரன்-பரமசிவனது, நல்-சிரேஷ்டம் பொருந்திய, தாமரை-தாமரை (மலர் போன்ற), பதமே-திருவடியையே, நாடு-தியானிப்பாயாக. எ-று. காண்-காண்-அசை. 96

46. இன்று சூழ்தரு. பெண்ணுடை. தீர்த்தம் பிரசாதம்.

மூலம் 48 வாழ லாமரன்.

### கந்த ரநுபதி 29.

இல்லே யெனுமா யையிலிட் டனைநீ,
பொல்லே னறியா மைபொறுத் திலையே,
மல்லே புரிபன் னிருவா குவிலென்,
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே. 97

(இ-ள்) இல்லே எனும்-(விசாரித்தால்) இல்லையாகிய, மாயையில்-மாயையின்கண், நீ-தேவரீர், இட்டனை-(என்னை) விட்டீர், பொல்லேன்-பொல்லாத வணுகிய அடியேனது, அறியாமை-மடமையை, பொறுத்திலை-பொறுத்தா யில்லை, மல்லே புரி-மல்லினைச் செய்கின்ற, பன்னிரு-பன்னிரண்டு, வாகுவில்-புஜங்களில், என்-எனது, சொல்லே-சொல்லாகிய (பாமாலையை), புனையும்-அணிந்துள்ள, சுடர்-பிரகாசம் பொருந்திய, வேலவனே-வேலாயுத்தினை உடைய (சிவ சுப்பிரமணியக்) கடவுளே எ-று. ஏ-அசை. 97

மூலம் 49 ஒழித்தி டும்பவப்.

### திருக் குறள் 1 (கடவுள் வாழ்த்து -5.)



இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்,
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. 98

(இ-ள்) இருள் சேர்-மயக்கத்தைப் பற்றி வருகிற, இரு வினையும்-(நல் வினை தீ வினை என்னும்) இரு வினைகளும், சேரா-உண்டாகா வாம், இறைவன்-தலைவனது, பொருள் சேர்-மெய்ம்மை சேர்ந்த, புகழ்-கீர்த்தியை, புரிந்தார்மாட்டு-விரும்பினவரிடத்து. எ-று. 98.

மூலம் 50 விருப்ப மாயிது.

### திரு நாவுக் கரசர் தேவாரம் (திருத் தாண்டகம். 10)

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனு,
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லே
மாதேவர்க் கேகாந்த ரல்ல ராகி,
லங்கமெலாங் குறைந்தொழுகு தொழுநோ யரா
யாவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனுங்,
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகி
லவர்கண்டீர் நாம்வணங்குங் கடவு ளாரே. 99

(இ-ள்) சங்க நிதி-சங்க நிதியும், பதும நிதி-பத்ம நிதியும், இரண்டும்-இரண்டினையும், தந்து-கொடுத்து, தரணியொடு-இப் பூமண்டலத்தோடு, வான் ஆள-தேவ லோகத்தையும் ஆட்சி செய்யும்படி, தருவரேனும்-கொடுத்தா ராயினும், மா தேவர்க்கு-பரமசிவனுக்கு, ஏகாந்தர்-பக்தர், அல்லார் ஆகில்-அல்லாதவ ராயின், மங்குவார்-(அஞ்ஞானத்தினால்) மூடப்

பட்ட. அவர்-அவர்களது, செல்வம்-ஐசுவர்யத்தை, மதிப்போம் அல்லேம்-மதிக்கமாட்டோம், அங்கம் எலாம்-தேகம் முழுவதும், குறைந்து-பிங்ந மடைந்து, ஒழுகு-(இரத்தம் சீழ்) வடிகின்ற, தொழு நோய ராய்-குட்டரோகிகளாக, ஆ உரித்து-பசுவை உரித்து, தின்று-தின்று, உழலும்-திரிகின்ற, புலைய ரேனும்-நீசர்களாயினும், கங்கை-கங்கையை, வார் சடை-நீண்ட ஜடையில், கரந்தாற்கு-ஒளித்த பரம சிவனுக்கு, அன்பர் ஆகில்-பக்தர்களாயின், அவர்-அவர்கள், நாம் வணங்கும்-நம்மால் நமஸ்கரிக்கப்பட்ட, கடவுளாரே-பரமசிவனே யாவர். எ-று. கண்டீர்-முன்னிலைப் பன்மை அசை. 99

---

மூலம் 46 இன்று சூழ்தரு.

சிவ ஞாந வள்ளலார் (சிவ ஞாநப் பிரகாச வெண்பா. 23)

பெண்ணுடை யாபரணம் பெய்தயிலம் தாம்பூலம்,
உண்ணலணை சந்தநத்தோடோரெட்டும்-விண்ணவர்க்கா,
யாகாத நஞ்சுண்ட வண்ணலடி யார்தமக்கிங்,
காகாது சொன்னேம றி 100

(இ-ள்) பெண்-பெண், ஆடை-உடை, ஆபரணம்-நகை, பெய்-தேய்க்கப்பட்ட, தைலம்-தைலம், தாம்பூலம்-தாம்பூலம், உண்ணல்-அருந்தல், அணை-(பஞ்சு) அணை (பொருந்தல்), சந்தநத்தோடு-சந்தநம், ஓர் எட்டும்-(என்னும்) ஒப்பற்ற எட்டும், விண்ணவர்க்கு ஆய்-தேவர்கட்காக, ஆகாத-பொருந்தாத,



நஞ்சு-விஷத்தை, உண்ட-புஜித்து (கண்டத்தில் தாங்கிய), அண்ணல்-பரமேசுவரனது, அடியார் தமக்கு-அடியவர்கட்கு, ஆகாது-(கைக்கொள்வது) பொருந்தாததாம், சொன்னேம்-(நாம்) கூறினேம், அறி-(நீ) அறிவாயாக, எ-று. "அடியார்தமக்கு" என்பதில், தம் இங்கு-அசை. 100

மூலம் 46 இன்று சூழ்தரு.

சிவ ஞாந வள்ளலார். (சிவ ஞாநப் பிரகாச வெண்பா. 24)

தீர்த்தம் பிரசாதந் திருநீறஞ் சக்கரமுஞ்,
சாற்றுமிறை கட்பிறந்த தாழ்வடமும்-போற்றுங்,
குருலிங்க சங்கமமுங் கொள்குறிக ளெட்டாங்,
கருவகலக் கட்டுரைத்தேங் காண். 101

(இ-ள்) தீர்த்தம்-(அபிஷேகஞ் செய்த) தீர்த்தமும், பிரசாதம்-பத்திரபுஷபநிர்மால்யங்களும், திருநீறு-விபூதியும், அஞ்சு அக்கரமும்-பஞ்சாக்ஷரமும், சாற்றும்-(மோக்ஷ சாதநம் ஆகக்) கூறுகின்ற, இறை-பரமேசுவரரது, கண்-நேத்திரத்தினின்றுப், பிறந்த-உண்டான, தாழ்வடமும்-நீண்ட (உருத்திராக்க) மாலையும், போற்றும்-(யாவரும்) தோத்திரம் பண்ணுகின்ற, குரு-குருவும், லிங்க-லிங்கமும், சங்கமமும்-சங்கமராகிய சாதுக்களும், (ஆகிய இவை), கொள்-கொள்ளத் தகுந்த, குறிகள்-சிந்நங்கள், எட்டு ஆம்-எட்டாகும், கரு அகல-(இவற்றை) ஜநந (மரண) நீங்குவதற்காக, கட்டுரைத்தேம்-(யாம்) கூறினேம். எ-று. காண் அசை. 101

திருப் பூ வணம், வேதாந்த மடம், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள், வைராக்ய (பக்தி) சதக உதாரணக் கவி 102க்கு, எழுதிய பக்தி ரசம் என்னும் உரை முற்றுப் பெற்றது.

---

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 13 | தூறு | நூறு |
| 2 | 7 | மரணத்தீன் | மரணத்தின் |
| 6 | 18 | கினவி | கிழவி |
| 12 | 16 | தேற்றத்தை | தோற்றத்தை |
| 14 | 2 | வாய்ந்த | வாய்த்த |
| 15 | 7 | நாடத்துகில் | நடாத்துகில் |
| 16 | 21 | உண்டாக்கின்ற | உண்டாகின்ற |
| 27 | 16 | கிலைமையான் | நிலைமையான் |
| 30 | 17 | யுடையவனே | உடையவனே |
| 31 | 8 | மல்லரு | மல்லிரு |
| 43 | 14 | மநந்தினே | மநத்தினே |
| 49 | 10 | அப்பவும் | அப்புவும் |
| 54 | 2 | உண்டாக | உண்டாகா |
| ,, | 4 | ராயார் | ராயர் |
| 56 | 3 | பேற்ரு | போற்ரு |
| ,, | 10 | பொழுதிங் | பொதிங் |
| ., | 15 | பவனத்தின் | பவளத்தின் |
| 62 | 3 | கண்கணே | கண்களே |
| 65 | 9 | வீன் | வீண் |
| 70 | 17 | மானது, | மானது, நரக |
| 74 | 21 | கருணேப் | கருணேப் |
| 75 | 13 | நாம்பொடு | நரம்பொடு |



ராம நாத புரம் ஜில்லா திருப் பூ வணம்,

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள், வெளியிட்டன.

| | | ரூ.ந.பை |
|---|---|---|
| 1 | வேதாந்த பதார்த்த மஞ்ஜுஷா வசநம் | 2—50 |
| 2 | விசார சாகரம் ஹிந்தி மொழி பெயர்ப்பு | 2—25 |
| 3 | கதா சரித் சாகரம் வசநம் கதை | 2—25 |
| 4 | வியாச தாத்பரிய நிர்ணயம் வசநம் | 0—50 |
| 5 | வேதாந்த சித்தாந்த முக்தாவலி வசநம் | 0—50 |
| 6 | நைஷ்க் கர்மய சித்தி வசநம் | 0—50 |
| 7 | வேதாந்த பரிபாஷை வசநம் | 0—44 |
| 8 | ஸ்வராஜ்ய சித்தி வசநம் | 0—50 |
| 9 | மண்டல பிராஹ்மண உபநிஷத் | 0—25 |
| 10 | ஈசாவாஸ்ய உபநிஷத், சங்கர பாஷ்யம் | 0—25 |
| 11 | ஹரிமீடே - ஹரிதத்வ முக்தாவலி | 0—75 |
| 12 | மார்கழித் திங்கள் பாரநயண மஞ்சரி | 0—50 |
| 13 | பகவத் கீதை 15வது அத்யாயம், மூர்க்க சதகம் | 0—50 |
| 14 | மந்திர உபதேசம் வசநம் | 0—25 |
| 15 | திருக் களர் வீர சேகர சரிதம் வசநம் | 1—00 |
| 16 | நாநா ஜீவ வாதக் கட்டளை உரை | 2—00 |
| 17 | கீதா சாரத் தாலாட்டு வகு சந்திரிகை உரை | 2—00 |
| 18 | மேற்படி நக்ஷத்திர விளக்க உரை | 0—25 |
| 19 | மகா ராஜத் துறவு, மநப் பிரசாதிநி உரை | 2—00 |
| 20 | பக்தி (வைராக்ய) சதக பத உரை பொழிப்புரை | 1—50 |
| 21 | வைராக்ய தீபம்-பத உரை பொழிப் புரை | 0—50 |
| 22 | சிடாசாரம், பால போதிநி உரை | 0—50 |
| 23 | வேதாந்த சாஸ்திரத் ரத்நாவலி 9 சேர்ந்தது | 3—00 |
| 24 | கீதாத் திரயம் கவி (ஈசுவர கீதை பகவத் கீதை பிரஹ்ம கீதை 3 சேர்ந்தது) | 3—00 |
| 25 | வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம் (விவேக சூடாமணி அஞ்ஞ வதைப் பரணி பஞ்சதசி மூன்று சேர்ந்தது) | 3—20 |

| | | |
|---|---|---|
| 26 | வாசிட்டம் 2055 கவி | 2—25 |
| 27 | ஒன்பது துறவிகள் பாடிய, திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி, அருட் பா மாலை | 1—00 |
| 28 | வீர சேகரத், திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி மணி மாலை சிறு சுடர் உரை | 0—75 |
| 29 | மேற்படி பத உரை | 0—25 |
| 30 | வைராக்கிய சதக தோத்திர உரை | 0—19 |
| 31 | ஈசுவர கீதை கவி | 0—25 |
| 32 | பகவத் கீதை கவி | 1—25 |
| 33 | பிரஹ்ம கீதை கவி | 0—38 |
| 34 | கைவல்ய நவநீதம் கவி | 0—56 |
| 35 | பஞ்சதசி கவி | 0—62 |
| 36 | வேதாந்த சஞ்ஞா வசநம் | 0—13 |
| 37 | சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி | 1—50 |
| 38 | திரிம்சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி | 0—25 |
| 39 | காசிகாநந்த விஜயம் | 0—25 |
| 40 | கைவல்ய நவநீதம், துறவு சாமிகள் பத சார உரை | 3—50 |
| 41 | கைவல்ய நவநீதம் கிருத பாந உரையும், ஆராய்ச்சி களும் | 3—50 |
| 42 | சசிவந்ந போதம், பதார்த்த பாஸ்கரன் உரை | 2—00 |
| 43 | வைராக்ய தீப உரை உதாரணக் கவி 73க்கு தீபச் சுடர் உரை | 1—00 |
| 44 | வீர சேகரத் திரு எம்பாவை-திருப்பள்ளி எழுச்சி ஆசார்ய திரய தோத்திர ரச மஞ்சரி (கவி 64.) | 0—25 |
| 45 | வைராக்ய (பக்தி) சதக உரை உதாரணக் கவி 103க்கு பக்தி ரச உரை. | 1—00 |
| 46 | கோவி லூர் மடத்தின், அத்புத மகிமா அகூபாரம். | 0—50 |
| 47 | மகாத்ம சரிதாமிருதம்-வசநம். | 2—50 |
| 48 | பிரபோத சுதாகரம்-பதப் பொருள் மொழி [பெயர்ப்பு | 0—50 |
| 49 | காணாத சித்தாந்த சந்திரிகை (தர்க்கம்) மொழி [பெயர்ப்பு. | 1—00 |
| 50 | சப்த பதார்த்தி (தர்க்கம்) மொழி பெயர்ப்பு. | 1—00 |
| 51 | கைவல்ய நவநீத உரை உதாரணக் கவி ஆதித்தன் [உரை. | 2—50 |